# கல்கி



இவரே எனது அரசியல் குரு

- காந்திஜி -



ALKI
5·1966

35
காசு

# கல்கி

## பொருளடக்கம்

பராபவ சித்திரை 25 ❊ மே 8





### நினைவுத் திரையில்...



சாதாரணமாகத் தமிழ்ப்பாட்டு இயக்கத்தைப் பரிகசிப்பவர்கள், "ஓஹோ! புல்லாங்குழல் கச்சேரிகூடத் தமிழிலேயே நடந்ததோ? பிடிலும் தமிழ்ப் பாட்டு பாடுகிறதோ? மிருதங்கமும் தமிழில்தான் அடித்தார்களோ?" என்று கேட்பதுண்டு. அதற்குத் தகுந்தாற்போல் பூதலூர் கிருஷ்ண மூர்த்தி சாஸ்திரிகள் கோட்டு வாத்தியத்தைத் தூக்கிக் கொண்டு மேடைக்கு வந்தபோது எல்லாருக்கும் ஒரே ஆச்சரியமாகப் போயிற்று. கோட்டு வாத்தியத்தைத் தமிழிலே வாசிக்க வந்துவிட்டாரே என்று நான் கவலைப் பட்டுக் கொண்டிருக்கையில் சாஸ்திரிகள் கணீரென்று கமாஸ ராகத்தில் ஒரு தமிழ்க் கீர்த்தனத்தை எடுத்தார்! வாய்ப் பாட்டாகத்தான்! சாரீரமாவது சாரீரம்! ரவையாவது ரவை; எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ என்று பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளைப் பார்த்துத்தான் சொன்னார்களோ, என்னமோ?

—கர்நாடகம்

கல்கி, செப்டம்பர் 1, 1941

நாட்டுக்கு உதவியா? கட்சிக்கு உதவியா?





மலர் 25 ● இதழ் 41



# அரசியல் சாஸனத்தைக் கிழிக்க வேண்டாம்

— ராஜாஜி

நமது அரசியல் சாஸனத்தை வகுப்பதில் மிகுந்த அக்கறையும் பெருமிதமும் கொண்டிருந்தவர் ஸ்ரீ க. சந்தானம் அவர்கள். எனவே, இப்போது நெருக்கடி நிலைமையை நீடிப்பதை அவர் வலுவாகக் கண்டிப்பது நியாயமே. இவ்விஷயத்தில் மத்திய சர்க்காருக்கு ராஜ்யங்களின் முதன் மந்திரிகள் வழி காட்ட வேண்டும் என்று கேட்பது பகுத்தறிவுக்கும் சரி, தருமிக்கும் சரி பொருந்தாது என்று அவர் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

முதன்மந்திரிகள் பாதுகாப்புச் சட்டத்தை நீடிக்க வேண்டும் என்று கூறியிருப்பது, சாஸனத்தில் மக்களின் உரிமைகளை நிலைநாட்டும் மூன்றும் பகுதியை அவர்கள் இலட்சியமே செய்ய வில்லை என்பதைக் காட்டுகிறது. ஜனநாயகம், மக்களின் ஜீவாதார உரிமைகள் ஆகியவற்றின் கட்டுப்பாடுகளின்றித் தாங்கள் அதிகாரம் செலுத்த வேண்டும் என்பதுதான் முதன்மந்திரிகளின் ஆசை. அரசியல் சாஸனத்தின் ஒரு பகுதியே தங்களை அசௌகரியப்படுத்துகிறது என்று ஒருவர் (அவர் மந்திரியாயிருப்பினும் சரி) கருதினால் அவருக்கு நமது சாஸனத்தில் நம்பிக்கை இல்லை என்றே அர்த்தம். சாஸனத்தின் கீழ் அத்தகைய மந்திரி எடுத்துக் கொண்ட பதவி விசுவாசப் பிரமாணமும் ஒரு பொய்யேயாகும். சாஸனத்தை நம்பாத அவர் நிர்வாகத்தின் அதிகார ஸ்தானத்தில் பணி புரிவதற்குத் தகுதி வாய்ந்தவரல்லர்.

டில்லியிலிருந்து வரும் செய்திகளைப் பார்க்கும் போது, நெருக்கடிப் பிரகடனத்தை ரத்து செய்வது பற்றி நடைபெறும் பேச்சுவார்த்தைகளால் முன்னிலும் மோசமான ஒரு நிலைமை ஏற்படுமோ என்று எண்ண வேண்டியுள்ளது. 'நெருக்கடிப் பிரகடனத்தை ரத்து செய்து விடலாம்; ஆனால் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் சர்க்காருக்குக் தந்துள்ள அதிகப்படி அதிகாரங்களையும் அரசியல் சாஸனத்துக்கு உட்படுத்தும் வகையில் சாஸனத்தைத் திருத்திவிட வேண்டும். அதாவது மக்கள் உரிமைகளை மீறிச் சர்க்கார் நடவடிக்கை எடுக்கும்போது தனிமனிதர்கள் அதை எதிர்த்து நீதிமன்றத்தில் வழக்காடுவதைச் சாஸனத்தின் மூலமே தடுத்து விடலாம்' என்பதுதான் இப்போது கூறப்படும் யோசனைகளின் உட்கருத்தோ என்று தோன்றுகிறது. இது இன்றைய நிலையைவிட மோசமானது; இப்போதுள்ள தாற்காலிகப் பாதுகாப்புச் சட்டத்தை இது நிரந்தரமாக்கி விடும்.

இவ்வாறு சாஸனத்தைத் திருத்துவது சட்டப்படி செல்லத் தக்கதல்ல என்று நீதிமன்றம் கருத ஏதுவுண்டு எனச் சட்ட மந்திரியும் அட்டார்னி ஜெனரலும் சர்க்காருக்கு விளக்கி இருக்கக் கூடும். தங்களுக்குச் சாதகமாக நிலைமையைச் சமாளிக்கச் சர்க்கார் சுற்றி வளைத்து மாற்று வழிகளைக் கண்டு பிடிக்க முடியாது; அதற்கு முயலவும் கூடாது. மக்கள் ஏதோ ஒரு சடங்கை எதிர்பார்க்கவில்லை; நடைமுறையில் மாறுதலையே வேண்டுகிறார்கள்.

சாஸனத்தின் ஷரத்துக்களுக்கு உட்பட்டு, சாமானிய காலச் சட்டங்களை இயற்றி, அவற்றின் மூலமே முதன் மந்திரிகள் விரும்பும் கண்டிப்பான அதிகாரங்களை வழங்கி விடலாம் என்று பிரதமரவர்கள் எண்ணுவதாக நினைக்கிறேன். அவர் மக்களை ஏமாற்ற விரும்பவில்லை என்று நம்புகிறேன். முதன்மந்திரிகளுக்கு அதிகப்படி அதிகாரம் தருவதாயின், அப்போது அந்த அதிகாரத்தைக் குறித்து நீதி மன்றங்களில் வழக்காடும் உரிமை மக்களுக்கு இருக்க வேண்டியது அத்தியாவசியம்.

சாஸனகர்த்தர்கள் பக்தி விசுவாசத்தோடு வகுத்த பிரிவுகளை உதறிவிட்டு ஒரு யதேச்சாதிகார சர்க்காரை அதனிடத்தில் அமர்த்த வேண்டும் எனப் பிரதமர் எண்ணமாட்டார் என்று நம்புகிறேன். உறுதியான, விவேகமான நிர்வாகம் நடைபெற வேண்டும் என்பதுதான் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தியின் நோக்கமெனக் கருதுகிறேன்.

'சாஸனத்தைக் காப்பாற்ற வேண்டும் ; அதற்குப் பூரண ஆரோக்கியமும் பலமும் பெற்றுத் தர வேண்டும்' என்று நாம் உறுதியாகச் சங்கற்பம் செய்து கொள்ள வேண்டும். இந்த அக்கறையுடன், இப்போதிலிருந்து பொதுத் தேர்தல்கள் நடைபெறும் வரையில் சர்க்கார் வெளியிடும் கருத்துக்களையும் அறிக்கைகளையும் பரிசீலிக்க வேண்டும். இரட்டை அர்த்தம் தொனித்தாலோ, மழுப்பலாகத் தோன்றினாலோ அவற்றைத் தெளிவாக்குமாறு சுட்டிக் காட்ட வேண்டும்.

''சர்க்கார் எந்த சித்தாந்தத்தையும் பிடித்துக் கொண்டிருக்க வில்லை. எங்களது சோஷலிஸம் இந்தியாவின் தேவைகளோடும், அபிலாஷைகளோடும், யதார்த்தச் சூழ்நிலையோடும் தொடர்பு கொண்டதே'' என்று பிரதமரவர்கள் வானொலியில் பேசியிருக்கிறார். இது வெறும் சொற்றொடர் அல்லவெனில் இதன் பொருள், 'சர்க்கார் கொள்கைகள் இதுவரை இருந்ததிலிருந்து இனி மாறுபடும்; நடைமுறைக்குப் பொருந்தாத, பழைய சித்தாந்தப் பிடிவாதமின்றித் தேசத்துக்கு ஏற்பட்டுள்ள பயங்கர நிலைக்கு ஏற்பவே இனி சர்க்கார் கொள்கை உருவாக்கப்படும்' என்பதேயாம். 'ஏழை மக்களின் நலனுக்காகப் பாடுபடுவதே இனி சோஷலிஸம்; இந்த இலட்சியத்தை மறந்து, இதை அடைவதாக நினைத்துப் பின்பற்றப்படும் ஒரு மார்க்கமே சோஷலிஸம் என்ற எண்ணத்தைக் கைவிடுவோம்' என்றெல்லாம் பிரதமரின் பேச்சு பொருள்பட வேண்டும். இந்தப் பேச்சின்படி நடப்பதாயின் இனி தனிமனிதனைச் சர்க்காருக்குப் பலியிடக் கூடாது. இப்போது சாஸனத்திலிருந்து சர்க்கார் வெகுதூரம் விலகிச் சென்றுவிட்டதால் நம் குடியரசின் ஆதாரமாகிய ஜீவாதார உரிமை விதிகள் சோஷலிஸத்தின் தேவைகளுக்கு ஏற்ப அடியோடு மாற்றப்பட்டு விட்டன. இந்நிலையைத் தடுத்துச் சாஸனத்தின் ஆட்சிக்கே திரும்ப வேண்டும் என்பதுதான் பிரதமரது வாசகத்தின் உண்மைப் பொருள். அந்தப் பொருளை அமுல் செய்யாமல் 'சோஷலிஸ'த்துக்கு முதலிடம் தருவது சாஸனத்தை எதிர்த்து அதைக் கிழித்தெறிவதற்கு ஒப்பேயாகும். இந்தச் 'சாஸன எதிர்ப்புக் கிளர்ச்சி'யை அடக்க வேண்டியது நம் கடமை.

## ஆட்குறைப்பு: ஒரு யோசனை

திட்டங்கள் பெருகப் பெருக மக்களின் வேலை வாய்ப்புக்களும் பெருகும் என்று சொல்லப்பட்டது. ஆனால் ஒவ்வொரு திட்ட காலத்திலும் வேலையில்லாதார் எண்ணிக்கை அபரிமிதமாகப் பெருகிக் கொண்டே போகிறது. தனியாரின் சிறு முதலீடுகளில் வேலை பெற்றிருக்கக் கூடியவர்களின் வயிற்றிலெல்லாம் இன்று சர்க்காரின் திட்டங்களை நிறைவேற்றி வைக்கும் ராட்சத இயந்திரங்கள் மண்ணைப் போட்டு வருகின்றன.

இந்த அழகான சூழ்நிலையில்தான் ஆட்குறைப்பு வேலைகளும் தொடங்கி விட்டன. புதிதாக வேலை வாய்ப்புக்கள் ஏற்படுத்தவில்லை என்பதோடு மட்டும் நின்றுவிடாமல் ஏற்கனவே வேலையில் உள்ளவர்களை வேலை நீக்கம் செய்யவும் தொடங்கி விட்டது அரசாங்கம். தமிழக சர்க்காரில் வேலை பார்ப்பவர்களில் நூற்றுக்கணக்கானவர்கள் தங்கள் ஊதியத்தை இழக்கவிருக்கிறார்கள்.

அவசியமில்லாதவர்களை வேலையிலிருந்து எடுப்பது நியாயமாகவே இருக்கலாம். பொதுப் பணம் அவர்களின் சம்பளத்துக்காகச் செலவிடப்படுவதைத் தடுப்பது சரியென்றே தோன்றலாம். எனினும், இதை வெறும் ரூபாய் – பைசா கண்ணோட்டத்தோடு மட்டும் பார்க்கலாகாது. 'இத்தனை சதவிகிதம் அதிகப்படி' என்று எளிதில் கணக்குப் போட்டு விடலாம். ஆனால் இது வெறும் கணக்குத்தான் என்று நினைத்துவிடலாகாது. இது உயிருள்ள மனிதர்களைக் குறித்த பிரச்னை. மக்களின் வாழ்வும் சர்க்காரின் அலுவலும் பின்னிப் பிணைந்த ஒரு துறை இது. இப்போது உபரி ஊழியர்கள் உண்டாவதற்குக் காரணம் அரசாங்கமே. தனியார் துறை விருத்தியாகச் சர்க்கார் அனுமதித்திருந்தால் இவர்கள் யாவரும்—இன்னும் எண்ணற்றவரும் – நிரந்தரமாக வேலை பெற்றிருப்பர். நாட்டின் உற்பத்திக்கும் இவர்களின் ஊழியம் உதவியிருக்கும். சுதந்திரக் கட்சி விரும்பிய இந்நிலையைச் சர்க்கார் விரும்பாததாலேயே இப்போது ஆட்குறைப்புக்கு அவசியம் நேர்ந்துள்ளது.

ஆட்குறைப்புச் செய்வதானால் அதோடு லைசென்ஸ் – பெர்மிட் கண்ட்ரோல் முறைகளையும் நீக்கியாக வேண்டும். அப்போதுதான் தனியார்துறை வளர்ந்து, இப்போது வேலை இழப்பவர்கள் அதில் இடம் பெற முடியும். ஆட்குறைப்பு என்ற ஒரு திசையில் மட்டும் செல்லாமல், கொள்கையை மாற்றி, வேறு பல இணக்கமான நடவடிக்கைகளும் எடுக்க வேண்டும். இல்லாவிடில் சிக்கல்கள் நாளுக்கு நாள் பெருகும்.

இவ்விஷயத்தில் ராஜாஜி கூறும் யோசனை: வேலை இழந்த நபர்களின் பெயர்களைச் சர்க்கார் பட்டியலில் வைத்திருக்க வேண்டும். இப்போது அவர்கள் பெற்றுவரும் சம்பளத்தில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தை அவர்களுக்குப் பிரதிமாதமும் தொடர்ந்து அளித்து

வர வேண்டும். அவர்கள் இதோடு திருப்தியடைந்து விடாமல் வேறு வேலைகளுக்கு முயலும் வகையில் இந்தச் சதவிகிதத்தை வருஷந்தோறும் சிறிது சிறிதாகக் குறைத்து வரலாம். வேறு வேலை கிடைத்து விட்டால் முற்றிலும் நிறுத்தி விடலாம். இது, அல்லது இது போன்ற திட்டங்களுடனேயே ஆட்குறைப்பை மேற்கொள்ள வேண்டும். எது வாயிலும் தனியார் துறையில் வேலை வாய்ப்புக்கள் பெருகுவதற்கு வழி செய்யாமல் சர்க்கார் ஆட்குறைப்பு செய்யலாகாது. கடைசியில் பார்த்தால் எல்லாத் தவறுகளுக்கும் ஆதாரம் மத்திய திட்டம், சர்க்கார் கட்டுப்பாட்டிலுள்ள பொருளாதாரம் இவை தான். புத்திசாலித்தனமான பொருளாதாரக் கொள்கையைக் காணும் வரையில் ஆட்குறைப்பு போன்ற பல நடவடிக்கைகளைக் காணத்தான்வேண்டும். இவை விஷப் புகை சுருள் சுருளாகப் பரவுவதுபோல் பரவிக் கொண்டேதானிருக்கும்.

# திரு காமராஜின் பிரசாரம்

('சுயராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)

திரு காமராஜ் அவர்கள் தமிழ் நாட்டில் நடத்தி வரும் தேர்தல் பிரசாரத்தில் என்னைப் பற்றிக் கூறுபவை, அவர் தற்போது வகிக்கும் ஸ்தானத்துக்கு உகந்ததல்ல என்று வருத்தத்துடன் எழுதுகிறேன். பதினைந்தாண்டுகளுக்குமுன் நான் முதன் மந்திரியாக இருந்த போது பட்டினிச் சாவுகள் நிகழ்ந்ததாகப் புனைந்து உரைத்தது மட்டுமல்ல; (இதுபற்றி நான் முன்பே எழுதியிருக்கிறேன்) ஐம்பதாண்டுகளுக்கு முன் காலஞ்சென்ற வ. வே. சு. அய்யரவர்களால் திருநெல்வேலி மாவட்டத்தில் சேரமாதேவியில் தொடங்கப்பட்ட குருகுலத்தைப் பற்றியும், அதற்கு அன்றைய தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி கொடுத்த மானியம் பற்றியும் எழுந்த ஒரு சர்ச்சையைக் குறித்து திரு காமராஜ் பேசியிருக்கிறார். நான் சமூகச் சீர்திருத்தங்களை முற்றிலும் எதிர்ப்பவன் என்றும் சாதிப் பிரிவினைகளை ஆதரிப்பவன் என்றும் நிரூபிப்பதற்காக அரை நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட இந்த விவகாரத்தை இப்போது இனைப்பிப் பேசி வருகிறார். இந்தக் குற்றச் சாட்டும் இதன் உள்ளுறைப் பொருளும் இன்றைக்கு அடியோடு சம்பந்தமற்ற விஷயங்கள் என்பதோடு சிறிதும் ஆதாரமற்றவையாகும். இந்திய தேசிய காங்கிரஸின் அக்கிராசனர் தவிர வேறு யார் இத்தகைய பொய்க் குற்றம் சாட்டியிருந்தாலும் நான் அதைப் பொருட்படுத்தியேயிருக்கமாட்டேன். பழைய ஆசாரங்களை எதிர்ப்பவன், வைதிகத்துக்கு எதிரி என்று பெயரெடுத்திருக்கிறேன். சாதிச் சட்டங்களையும், சாதிப் பிரிவினைகளையும் எதிர்த்து நான் மிகவும் தீவிரமாகக் கடந்த ஐம்பதாண்டுகளாக எடுத்து வந்த அரசியல் நடவடிக்கைகள் இல்லாதிருந்தால் திரு காமராஜரும், அவரை ஆதரித்து வருபவர்களும் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்களோ அவர்கள் இன்று பழனியில் உள்ள புகழ்பெற்ற ஆலயத்துக்குள்ளோ, மதுரையிலும் திருச்செந்தூரிலும் உள்ள மகத்தான கோயில்களுக்குள்ளோ பிரவேசித்திருக்க முடியாது.

இது போன்ற விஷயங்களைச் சொல்வது என் இயல்பு அல்ல. இதெல்லாம் அனைவருக்கும் தெரியும். எழுத்தறிவற்ற புதிய தலைமுறையைத் தவறான வழியில் இட்டுச் செல்வதற்காகக் காங்கிரஸ் அக்கிராசனர் அசத்தியமான குற்றச்சாட்டுகளைச் செய்வதால் நான் இது பற்றிக் குறிப்பிட வேண்டியதாயிற்று. நான் சாதித் துவேஷத்தை ஆதரிப்பவன் அல்ல; விஷய ஞானமின்றி நமது சமூக சரித்திரத்தைத் தவறாக வியாக்கியானம் செய்பவனுமல்ல. நமது பண்டைய மரபுகளை நான் மதிக்கிறேன்; ஆயினும் அவற்றில் பலவற்றைச் சீர்திருத்திப் புத்துருவம் தர விரும்புகிறேன். திரு காமராஜ் அவர்களும், அவரது இன்றைய நண்பர்களும் பின்பற்றும் வழி வேறாக இருக்கலாம். அதற்காக அவர் தொடர்பற்ற, ஆதாரமற்ற குற்றச்சாட்டுகளைக் கூறிக் கொண்டிருக்கலாகாது. நாம் சத்தியத்துடன் நடப்பதும், சரித்திரத்தைத் திரித்துக் கூறும விருப்பதும் நமக்கே க்ஷேமம் தரும்.

திரு காமராஜ் அவர்கள் மீண்டும் இதே போல் குற்றம் சாட்டித் தம் போக்கைத் தொடர்ந்தாலும் நான் இந்த மனத்துக்குப் பிடிக்காத விஷயத்தை இனித் தொடமாட்டேன்.

# அட்டைப்படப் பிரமுகர்

**காந்திஜி**, 'எனது அரசியல் 'குரு' என்று ஒருவரைக் கூற வேண்டுமாயின் அத்தகையவரிடம் எத்தகைய உயர் பண்புகள் பொருந்தியிருக்க வேண்டும்? சத்தியம், நேர்மை, தீரம், தரும சிந்தனை, தியாகம், தேசப் பற்று, ஜீவதயை முதலிய உத்தமமான குணங்கள் யாவும் ஒருங்கே பெற்றிருந்ததால் தான் ஸ்ரீ கோபாலகிருஷ்ண கோகலே அவர்கள் அடிகளின் ஆசானாகக் கூறப்படும் பெருமையை எய்தினார். ஸ்ரீ கோகலே எந்தப் பிரிவைச் சேர்ந்திருப்பினும், இன்று அகிலஇந்தியர்களின் அஞ்சலிக்கும் உரியவராயுள்ளார். கோகலேயின் நூற்றாண்டை ஒட்டி 'கல்கி' அட்டையில் அவரது திருஉருவை வெளியிட்டு நாமும் அப்பெருமகனுக்கு அஞ்சலி செலுத்துகிறோம்.

★

பிரம்மபுத்திரா பள்ளத்தாக்கில் நீர்–மின் விசை உற்பத்தி செய்வதற்கும் மேற்குப் பாகிஸ்தான் எல்லைப் பகுதிகளில் உள்ள எரிவாயுக்களைப் பயனுக்குக் கொண்டு வரவும் இந்தியா–பாகிஸ்தான் ஆகிய இரு நாடுகளும் கூட்டாகப் பொதுத் திட்டங்கள் வகுத்துக் கொண்டு செயலாற்றுமாயின், இத்திட்டத்துக்காகக் கணிசமான நிதியம் தர உலக பாங்கு தயாராயிருக்கிறது. இத்திட்டங்களினால் இரு நாடுகளும் மிகுந்த பயனடையும். உலக பாங்கின் இந்த யோசனை பொருளாதார ரீதியில் மட்டுமின்றி இவ்விரு நாடுகளின் ஒற்றுமைக்கும் உதவக் கூடிய உத்தமமான யோசனையாகும். அநாவசியமாகத் தங்கள் சக்திகளைப் பகைமையில் செலவிட்டுக் கொண்டிருக்கும் நாடுகளிடையே நட்பும் பரஸ்பர நம்பிக்கையும் ஏற்படுவதற்கு இத்தகைய கூட்டுத் திட்டங்கள் மிக உதவும். இந்தத் திசையில் யோசனை கூறி, இவற்றுக்காக உலக நாடுகள் உதவுவது ஆக்கரீதியில் அவை புரியக்கூடிய அரும் பணியாகும். எனினும், இந்த யோசனையை அதற்குரிய வகையில் நம் பிரதிநிதியும் அதிகாரிகளும் மனமார




வரவேற்கவில்லை. பாகிஸ்தானின் அந்தரங்க சுத்தம் குறித்துச் சந்தேகம் இருக்கிறது. பாகிஸ்தான் நட்புக்குச் சாதகமாக நடக்கும் என்று முன்கூட்டியே உறுதிமொழி வாங்கித் தரச் சொல்வது யதார்த்தத்துவ அறியாமையைக் காட்டுகிறது. இப்போது ஒற்றுமைக்கான வாய்ப்பை வரவேற்க வேண்டியதே அவசியம். 'ராஜதந்திர முன்னெச்சரிக்கை'க்கு இப்போது தேவையில்லை.

தெற்கு ஆசியாவில் ஒற்றுமையை ஏற்படுத்த விரும்பும் எல்லா நாடுகளுமே வியாபாரத் தடைகளை அகற்றுவதை முதல் படியாகக் கொள்ள வேண்டும் என்பது என் கருத்து. இதில் ஓர் அங்கமாக இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே சுதந்திரமாக வர்த்தகம் நடைபெற்றால் ஆரம்பகால ஐயங்கள் அகன்று கூட்டுத் திட்டங்களுக்கும் தாமாகவே வழி பிறக்கும். நட்பைத் தொடங்கத் தீரம் முதல் தேவை. ஸ்ரீ லால்பஹாதுர் அவர்கள் தாஷ்கெண்டில் இந்தத் தீரத்தைத்தான் காட்டினார். இப்போதோ அதிகாரிகள் சந்தேகிப்பதிலும், 'ஜாக்கிரதை'யாக இருப்பதிலுமே மூழ்கியிருக்கின்றனர். இந்தியா பாகிஸ்தான் ஆகிய இரு நாடுகளின் வரலாற்றுப் பண்புகளை இணைத்துப் பார்த்து, அவற்றை மையமாக வைத்து ஆட்சியாளரும் மக்களும் நல்ல முடிவுகள் காண வேண்டும். நாம் விழிப்புடனிருந்து நற்பண்புகளில் மனமார்ந்த நாட்டத்துடன் காரியம் செய்தால்தான் தகுந்த முடிவு காணலாம். வெறுமே மேம்போக்காக நீந்திக் கொண்டிருந்தாலும் சரியான காரியத்தைச் செய்து விடலாம் என்றெண்ணுவது தவறு.

★

பெர்மிட் இல்லாமல் சென்னை நகருக்கு அரிசி கொண்டு வரும் பயணிடமிருந்து கைப்பற்றப்பட்ட இருநூறு மூட்டை அரிசி எழும்பூர், மாநில மாஜிஸ்திரேட் அறை கொள்ளாமல் ஒரு வருஷமாக வீணில் அடுக்கி வைக்கப்பட்டிருந்தது. இது பற்றி 'ஸிவில் ஸப்ளை' இலாகாவுக்கு நீண்ட காலமாக எழுதியும் அவர்கள் அரிசி மூட்டைகளை எடுத்துப் போகவில்லை என்று போலீஸ் கோர்ட் சிப்பந்தி கூறியதாகச் செய்தி காண்கிறது. இப்போதுதான் மூட்டைகளை எடுத்துப் போக ஸிவில் ஸப்ளை இலாகா உத்தரவு பிறப்பித்திருக்கிறது. இதற்குள் பல மூட்டை அரிசி பாழாகி விட்டது.

ஒரு வருஷமாகப் போதிய வசதியற்ற இடத்தில் இருந்த அரிசி எப்படியிருக்கும் என்பதை நாம் அறிவோம். இது போன்ற சம்பவங்களுக்குப் பின்னும் சர்க்கார் தங்கள் கட்டுப்பாடுகளை நியாயம் என்று கூற முடியுமா?

சர்க்கார் தங்கள் கொள்கையாலேயே அரிசியை ஏராளமாக விரயம் செய்துவிட்டு வெளி நாடுகளில் உதவி கேட்கிறார்கள்; 'பஞ்சம் பஞ்சம்' என்கிறார்கள். இருநூறு மூட்டை அரிசி உருவாக எவ்வளவு மனித சக்தி செலவழிந்தது என்பது சோஷலிஸ சர்க்காருக்குத் தெரியுமா?

★

'அந்நிய உதவிகளை இனிமேல் நிறுத்தவே இப்போது அந்நிய உதவி கோருகிறோம்' என்கிறார் ஸ்ரீமதி இந்திராகாந்தியம்மை. 'இனி போரை நிறுத்தவே இப்போது போராடுகிறோம்' என்று கூறி உலக யுத்தம் நடத்தினார்கள்: அது எப்படிப் பொய்யாயிற்று என்பதைக் கண்டோம். 'உதவியை நிறுத்த உதவி' என்பது வட்டிக்கு வட்டி சேர்ப்பதற்கே ஒரு கவர்ச்சிகரமான மாற்றுச் சொற்றொடர்.

★

ஸோமாலியா நாட்டுக் கொடியும் சுதந்திரக் கட்சிக் கொடியும் ஒரே போல் இருப்பதைப் பற்றிப் பார்லிமெண்டில் சிலர் கவலைப் படுவதாகத் தெரிகிறது. ஆனால் காங்கிரஸ் கட்சியின் கொடி இந்திய யூனியன் கொடியைப் போலவே இருப்பதால் தேர்தல்களில் அக்கட்சிக்குக் கிடைக்கும் பெருத்த உதவி பற்றி இவர்கள் சிறிதும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை.

# புதுமையின் பொலிவுக்கு ஹமாம்




அதிக காலம்
நீடித்துழைக்கும்
டாய்லெட்
சோப்

நாள்தோறும் ஹமாம் உபயோகியுங்கள். உங்கள் சருமத்தைச் சுத்தம் செய்வதுடன், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது. உங்கள் மேனிக்கு கவர்ச்சியான மெருகையும் கொடுக்கிறது. நெடுங்காலம்...நீடித்திருக்கும் ஹமாம் டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்.

டாடா தயாரிப்பு

CMTH-3

# எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் இருங்கள் நாள்முழுவதும் சுறுசுறுப்பாக இயங்குவதற்கான புத்துணர்ச்சிக்கு

# புதிய கால்கேட் லோர்னே டால்க்

புதிய கால்கேட் லோர்னே டால்க்கின் புதுப்பிக்கும் நறுமணம் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது....நாள் முழுவதும் அந்தத் துடியான சுறுசுறுப்பைத் தருகிறது. இளமைத் துடிப்பும், சுறுசுறுப்பும், விளையாட்டுகளில் பிரியமுள்ளவர்கள் குறிப்பாக கால்கேட் லோர்னே டால்க் வியர்வையைத் துரிதமாக கிரகித்துக்கொண்டு தாங்கள், நாள் முழுவதும் உற்சாகமாக இருக்க உதவுவதை நன்கு அறிவார்கள்!

இது சிக்கனமானதும்கூட! உங்கள் குடும்பத்தினருக்கு கால்கேட் லோர்னே டால்க்கை வாங்குங்கள்,—அது சுறுசுறுப்பான நாகரீக மக்களுக்கேற்ற புதியதொரு பரவசமூட்டும் நறுமணம் கொண்டது!






CLT.SJ.TAM






2. எம். ஸிடி. முத்தையா செட்டியார் உயர்நிலைப் பள்ளிகளின் ஸ்தாபகர் தினத்தில் ஜெனரல் கே. எம். கரியப்பா தலைமை வகித்துப் பரிசுகளை வழங்கினார்.

1. பராபவ தமிழ்ப் புத்தாண்டு சித்திரை முதல் நாளன்று பொம்மையபுரம் ஆதீனம் மயிலம் சிவ ஞான பாலைய ஸ்வாமிகள் மடத்துக்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத் குரு சங்கராச்சாரிய ஸ்வாமிகள் புதுப் பெரியவர்களுடன் விஜயம் செய்தார்.

•

3. மௌலீஸ் அட்வர்டைஸிங் திரு ராமபத்திரன் அகில உலக விளம்பரக் கலைக் கழகத்தின் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டதைப் பாராட்டிப் பத்திரிகைப் பிரதிநிதிகள் சங்கத்தினர் ஒரு தேநீர் விருந்தளித்தனர்.

4. கல்கத்தா தென்னிந்திய பஜனை சமாஜத்தின் ஆதரவில் ஸ்ரீ தியாகராஜ ஹாலில் நடைபெற்ற ஸ்ரீ ராம நவமி மகோத்சவத்தில் தஞ்சாவூர் சகோதரிகளின் கதாகாலக்ஷேபம் சிறப்பாக நடைபெற்றது.

5. கல்கத்தா கலைக் கழகத்தினர் டி. ஆர். என். ராஜன் தயாரித்த 'பாவ மன்னிப்பு' நாடகத்தை கல்கத்தா தியாகராஜ ஹாலில் நடத்தினர். ரவீந்திர பாரதி பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த அஜித்குமார் உரையாற்றினார்.







# சிவனருட் செல்வர்

## 2. ஞான வேள்வி

சேக்கிழார்பெருமான் தாம் இயற்றிய நூலுக்குப் பெரிய புராணம் என்று பெயர் வைக்கவில்லை. ஆனால் ஒரு குறிப்புத் தருகிறார்.

எடுக்கும் மாக்கதை இன்தமிழ்ச்
செய்யுளாய்
நடக்கும் மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீள்முடிக்
கடக்களிற்றைக் கருத்துள் இருத்துவாம்.

''உலகெலாம்'' என்று ஆண்டவன் அடி எடுத்துக் கொடுத்தபின், சேக்கிழார் பிள்ளையாரைக் குறித்துப் பாடுகின்ற பாடல் இது. கதை என்றால் புராணம். மாக்கதை என்று சொல்லுகின்றார். ஏன் அப்படிச் சொல்லுகின்றார்? எண்ணிக்கையினால் இது பெரிய புராணம் அல்ல. மிகவும் எளிமையாக வாழ்ந்தவர்களின் வரலாறுகள்தான் இந்தப் புராணத்தில் உள்ளன; இது திருத்தொண்டர் புராணம்.

ஞானத் தாயாகிய தமிழ்க் கிழவியும், ஞான பண்டிதனாகிய தமிழ்க் குழவியும் ஒரு சமயம் சந்திக்க நேர்ந்தது. ''தாயே! உலகிலே பெரியது எது?'' என்று வினவினார் ஞானபண்டித ஸ்வாமி.

திருமுருக கிருபானந்த வாரியார்

"பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது"

என்றார் ஔவைப் பிராட்டியார்.

முருகப் பெருமான் அதனைக் கேட்டு, "ஓ! புவனந்தான் பெரியதோ?" என்றார்.

"புவனமோ நான்முகன் படைப்பு" என்று தமிழ்க் கிழவி கூறினார்.

"அப்படியானால் நான்முகன்தான் பெரியவனோ?" என்று வினவினார் முருகவேள்.

"இல்லை, நான்முகனோ கரியமால் உந்தியில் வந்தோன்" என்று தமிழ்ப் பாட்டி கூறினார்.

"ஓ! அப்படியாயின் கரியமால் பெரியவரோ?" என்று கேட்டார், தமிழ்க் கடவுள்.

"இல்லை, இல்லை. கரியமாலோ அலை கடல் துயின்றோன்" என்று கூறினார் ஔவையார்.

"அலைகடல் பெரியது என்று கூறு கின்றாயோ?" என்று கேட்டார் செந் தமிழ்ப் பிரியர்.

"இல்லை, கடலையும் குறுமுனி உண் டாரே" என்று ஔவையார் கூறியதும், "குறுமுனி பெரியவரோ?" என்று கேட்டார் முருகவேள்.

"இல்லை. குறுமுனியோ கலசத்திற் பிறந்தோன்" என்று ஔவையார் கூறினார்.

"கலசம் பெரியதோ?"

"கலசமோ புவியிற் சிறுமண்."

"புவி பெரியதோ?"

"புவியும் உலகைத் தாங்கும் அரவி னுக்கு ஒரு தலைப் பாரம்தானே?"

"அப்படியா? அரவமாகிய ஆதி சேடன்தான் பெரியவனோ?"

"அதுவும் இல்லை. அந்த அரவும் உமையவள் சிறு விரல் மோதிரம் தான்."

"பின்னே பெரியவர் யார்? உமைய வள் பெரியவளோ?" என்று வினவினார் வேலவர்.

"அப்படியும் இல்லை. ஏனெனில், உமை இறைவர் பாகத்து ஒடுக்கம்."

"அவ்வாறாயின் இறைவர்தாமே, பெரியவர்?" என்றார் இளம்பூரணர்.

"இல்லை, இல்லை. இறைவரோ, தொண்டருள்ளத்து ஒடுக்கம்; தொண் டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே" என்றார் ஔவையார்.

அடியார்களின் பெருமையே அளவிட முடியாதது: பதினாயிரத்துக்கு மேற் பட்ட கவிகளுடைய இராமாயணம், பாரதம், கந்தபுராணம் என்ற நூல் களுக்குப் பெரிய புராணம் என்று பெயர் வரவில்லை. சுமார் நாலாயிரம் பாடல்கள் உள்ள திருத்தொண்டர் புராணத்துக்கே பெரிய புராணம் என்று பெயர் வந்தது.

உலகிலே எல்லாவற்றைக் காட்டி லும் பெரிது அடியார் பெருமையே.

"உயர்ந்தது எது? இழிந்தது எது?" என்ற ஆராய்ச்சிக்குப் புறநானூற்றிலும் விடை கூறப்பட்டுள்ளது.

"ஈஎன இரத்தல் இழிந்தன்று; அதன் எதிர்,
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று;
கொள் எனக் கொடுத்தல் உயர்ந்தன்று, அதன்எதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று"

ஒரு பொருளைக் கொடு என்று இரப் பது இழிந்தது; அவ்வாறு இரந் தோர்க்கு 'ஈயேன்' என மறுத் தாலோ அதனினும் இழிவு. கேட்ப தற்கு முன்னே குறிப்பறிந்து, தானே விரும்பிக் கொடுத்தல் உயர்ந்தது; அவ்வாறு கொடுப்பினும் 'கொள் ளேம்' என்பது அதனினும் உயர்ந்தது.

நாயன்மார்கள் ஆண்டவனிடம், "கொடு" என்று எதையுமே கேட்ட இல்லை. அவர்கள் நாடியதெல்லாம் "கூடும் அன்பினில் கும்பிடுதலே." பல ஆண்டுகளாக வந்தித்து வணங்கியும் அவர்கள் சிவபெருமானிடம் ஒன்றும் கேட்க வில்லை. எனவே, பார்வதி தேவியாருக்கு ஓர் ஐயம் தோன்றிற்று. சிவபெருமானிடம் சென்று, "பெரு மானே! இந்த அடியார்கள் பல ஆண்டுகளாகக் கும்பிட்டும் ஒன்றும் கேட்கவில்லையே! அவர்களே வாய் விட்டுக் கேட்கவில்லையாயினும் நீங்க ளாகவாவது கொடுங்களேன்" என்று கேட்டுக் கொண்டார். அந்த வேண்டு கோளுக்கிரங்கிய சுவாமி, நாயன்மார் களை அழைத்து, "உங்களுக்குப் பரகதி தருகிறேன்" என்றார். பரகதி—மோட்ச லோகம் என்பது சிறு பொருளா? அத னையே வேண்டாம் என்று கூறிவிட் டார்கள் நாயன்மார்கள். சிவபெரு மான் அருளிய வீட்டுப் பேற்றையே வேண்டாம் என்று கூறியவர்களின் கதைகள் அல்லவா? அதனால்தான் இதனை, "எடுக்கும் மாக்கதை" என்றார் சேக்கிழார் பெருமான்.

பிள்ளையாரைத் துதிக்கும் சேக் கிழார் 'தடக்கை' என்றார். ஏன் அவ் வாறு கூறினார்? தடம் என்றால் விசாலம் என்று பொருள். வள்ளல்களின் கை விசாலமாக விரிந்திருக்கும். மூடிக் கொண்டிருந்தால் குறுகிய கை. பஞ்ச கிருத்தியங்களைச் செய்கின்ற கையல் லவா பிள்ளையாரின் கை? அதனால்

தடக்கை. சேக்கிழார் நூலை நன்றாகக் கற்றுத் தம்முடைய நூலில் அடி அடியாய் எடுத்தாண்டிருக்கிறார் கம்பர் என்று கருத இடமுண்டு. தடக்கை என்ற சொல்லை அப்படியே எடுத்து, ''தான் கண்டார் தானே கண்டார்; தடக்கை கண்டாரும் அஃதே'' என்று ஆள்கின்றார்.

பிள்ளையாருக்கு இருப்பது போன்று வேறு எந்தத் தெய்வத்துக்கும் அவ்வளவு பெரிய செவிகள் இல்லை. ''ஓம் சூர்ப்பகர்ணாய நம'' என்பது துதி. சூர்ப்பம் என்றால் முறம் என்று பொருள். பிள்ளையாருக்கு முறம் போன்ற காதுகள். ஏன் அப்படி? நாம் எல்லோரும் பிறவிப் பெருங் கடலில் கிடந்து உழன்று, பிள்ளையாரின் திருவடியாகிய புணைபற்றியிருக்கிறோம். ''ஐயோ, இந்தக் குழந்தைகள் பிறவிப் பெருங்கடலில் சிக்கி என் பாத புணைபற்றி விட்டார்களே! அவர்களை விரைவாகக் கொண்டு போய் முத்திக் கரை சேர்ப்போம்'' என்று பிள்ளையார் தமது முறம் போன்ற பெரிய செவிகளால் காற்றை அசைத்துச் செல்கிறாராம்.

**மாற்றரிய பிறவியெனும் மறிகடலின்**
**வாய்ப்பட்டுப்**
**போற்றரிய திருமலர்த்தாள் புணைபற்றிக்**
**கிடந்தேற்குச்**
**சாற்றரிய முத்தியெனுந் தடங்கரையில்**
**உய்ப்பதற்குக்**
**காற்றெறியுந் தாள்செவியார் கடாக்களிற்**
**றைப்பணிருதுமே.**

பிள்ளையாரைக் கும்பிடும் போது நாம் இதனை மறந்துவிடக் கூடாது. 'நீள்முடி' என்று பாடலில் வருகிறது. நீள்முடி என்றால் அவருக்கு மேலே தலைவர் இல்லை என்று பொருள்.

**அளவி லாத பெருமைய ராகிய**
**அளவி லாஅடி யார்புகழ் கூறுகேன்**
**அளவுகூட உரைப்பரி தாயினும்**
**அளவில் ஆசை துரப்ப அறைகுவேன்''**

அளவிலாத அடியார்களின் கதையை ஆசை பற்றிச் சொல்லுகிறேன் என்கிறார் சேக்கிழார். இதே கருத்தைக் கம்பர், ''ஆசைபற்றி அறையலுற்றேன்'' என்று கூறினார்.

ஞானமே ஒரு வடிவமானது பெரிய புராணம். ஞான வேள்வி தொடங்குகிறது. அறிவை அக்கினியுடன் ஒப்பிட்டுச் சொல்லுவது வழக்கம். பழங் காலத்தில், பெரியவர்களின் படங்களை வரையும் போது சிரசைச் சுற்றி ஒளி மண்டலம் போல் வரைவார்கள். அன்பும் பண்பும் இருக்குமிடம் இதயம்; ஞானம் அதற்கு மேலே இருக்கிறது. சிலரிடம் அன்பு இருக்கும்; ஞானம் இராது. இரண்டும் சேர்ந்திருப்பது மிகவும் அரிது. பலாப்பழம் வெளித் தோற்றத்துக்கு அழகாயிராது: அதனுள்ளே உள்ள சுளை தேனினும் இனிக்கும். எட்டிப் பழம் அழகாயிருக்கும்; ஆனால் இனிமையாக இராது. அழகும் இனிமையும் கலந்து உள்ளது மாங்கனி. அதைப் போன்றதுதான் பெரிய புராணம். முதல் மந்திரியாக இருந்த பரம ஞானியாகிய சேக்கிழார் பெருமான் தில்லையின் எல்லையில் வாழ்ந்து நடராசப் பெருமானின் அநுக்கிரகத்தினால் இம் மகாகாவியத்தைப் பாடியருளினார்.

**'' உலகெ லாம்உணர்ந் தோதற்கரியவன்**
**நிலவு லாவிய நீர்மலி வேணியன்**
**அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்**
**மலர்சி லம்படி வாழ்த்தி வணங்கு**
**வாம்''**

அகர உகர மகரத்தின் சம்மேளனம் ''ஓம்'' என்ற பிரணவ மந்திரம். அகரம் சிருஷ்டியையும், உகரம் ரட்சகத்தையும், மகரம் சம்ஹாரத்தையும் குறிக்கும். பெரிய புராணம் அறுபத்து மூன்று நாயன்மார்களை ரட்சிக்கின்ற

---

**கொய்யாப் பழம்**



ஓய்வுபெற்ற தமிழாசிரியர் ஒருவர் பழ வியாபாரம் செய்து வந்தார். ஒருவர், ''கொய்யாப் பழம் இருக்கிறதல்லவா? இரண்டு டஜன் கொடுங்கள்'' என்றார். தமிழாசிரியர் எல்லாப் பழங்களையும் ஒரு முறை பார்த்து விட்டு, ''கொய்யாப் பழம் என் கடையில் இல்லை. மரத்தில் இருக்கும்'' என்றார்.

''இதோ, இந்தக் கூடையில் இருக்கிறதே!''

''ஐயா! இந்தக் கூடையில் இருக்கும் பழமும் கொய்தது தான். நீங்கள் கொய்யாத பழம் கேட்டால் நான் எப்படிக் கொடுக்க முடியும்?'' என்றார் கடைக்காரர். பழம் வாங்க வந்தவர்கள் சிரித்துக் கொண்டே இந்தக் கொய்த கொய்யாப் பழத்தைப் பெற்றுச் சென்றனர்.

— இ. வி. சுப்பிரமணியன்

புராணமாதலால், ரட்சக எழுத்தாகிய உகரத்தை முதலாகக் கொண்டு ''உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன்'' என்று பாடத் தொடங்கினார் சேக்கிழார். அவர் பாடியதை அடியொற்றித் தான் கம்பர் ''உலகம் யாவையும்'' எனத் தொடங்கினார் என்பர். சேக்கிழார் பெருமானுக்கு முன்னர் நக்கீரர், ''உலகம் உவப்ப'' என்று தொடங்கி யிருக்கின்றார். சேக்கிழார் பெருமான் கூறியுள்ள ''உலகெலாம்'' என்பது ஓர் உலகைக் குறிப்பதன்று. ஞான உலகம், பக்தி உலகம், கர்ம உலகம், சக்தி உலகம், மண்ணுலகம், விண்ணுலகம், பிரம்ம உலகம் போன்ற எண்ணிலாத உலகங்களெல்லாம் உணர்ந்து ஓதற்கரியவன் இறைவன். ஞானிகள் தங்கள் ஞானத்தினால் உணர்வார்கள்; ஆனால் ஓதமுடியாது. குழந்தைகள் மெய்தீண்டிய இன்பத்தையே — சதானந்தத்தையே — சொல்ல முடியாத போது, சதானந்தத்தை எப்படிச் சொல்ல — ஓத—முடியும்? பிறவி என்னும் வேகும் நோயில் உழல்கின்ற நோயாளிகளிடம் சேக்கிழார் பெருமான் ஆண்டவனைப் பற்றிச் சொல்லும் போது, '' நிலவுலாவிய நீர்மலி வேணியன்'' என்று அவரது தன்மையைக் கூறுகிறார். குளிர்ந்த நிலவைத் தலையில் வைத்துக் கொண்டிருக்கிறாராம் சுவாமி. அவரது தலையில் கங்கை இருக்கின்றது. தலையில் ஆறு இருக்கின்றது என்றால் குளிர்ந்த பண்பு தலையில் இருக்கிறது என்று பொருள். எப்போதும் தலை குளிர வேண்டும். அதனால் தான் குழந்தைகள்



தலையில் பெற்றோர்கள் விளக்கெண்ணெய் தடவுகிறார்கள்.

குழந்தை ஒன்று தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருந்தது. அந்தத் தோட்டத்தில் ஜலதாரைத் தண்ணீர் ஓரிடத்தில் தேங்கியிருந்தது. ஜலதாரையில் கோலி விழுந்து விட்டது. அதை எடுக்க முயன்ற குழந்தையும் விழுந்தது. உடனே, ''அப்பா, அப்பா!'' என்று அலறியது அக் குழந்தை. அது கேட்ட தந்தை ஓடோடியும் வந்தார். ஜலதாரை நீராயிற்றே என்று யோசித்துக் கொண்டு நின்றாரா? இல்லை. உடனடியாகத் தாமே ஜலதாரைத் தண்ணீரில் இறங்கிக் கைகொடுத்து, குழந்தையை வெளியில் எடுத்துப் பின் சுத்தமான நீரில் குளிப்பாட்டினார். ஒரு குழந்தை அசுத்த ஜலத்தில் விழுந்தால் அதைக் குளிப்பாட்ட ஒரு குடம் சுத்த ஜலம் போதும்.

ஐந்து கண்டங்களில் உள்ள நாம் எல்லாரும் ஆண்டவனின் குழந்தைகள். நாம் எல்லோரும் உலக மாயை ஆகிய சேற்றில் விழுந்து விட்டோம். நாம் பூசிக் கொண்ட சேற்றைக் கழுவ எம்பெருமான் கங்கையாற்றைத் தலையில் வைத்துக் கொண்டிருக்கிறார். இந்தக் கருத்தை அருணகிரி நாதர் சொல்லுகின்றார்:





பேற்றைத் தவஞ்சற்று மில்லாத
வென்னைப்ர பஞ்ச மென்னுஞ்
சேற்றைக் கழிய வழிவிட்ட
வாசெஞ் சடாடவிமேல்
ஆற்றைப் பணியை யிதழியைத்
தும்பையை யம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான்
குமாரன்க்ரு பாகரனே

(கந்தரலங்காரம்)

சிவஞான போதத்தின் காப்புச் செய்யுளில் பன்னிரண்டு ஆத்திரங்களைக் குறிப்பது போல் பன்னிரண்டு சொற்கள் உள்ளன. அதே போன்று சேக்கிழார் பெருமானின் 'உலகெலாம்' என்ற பாயிரப் பாடலில் மொத்தம் அறுபத்துமூன்று எழுத்துக்கள் உள்ளன.

சேக்கிழார்பெருமான் பாடும்போது சொற்களை எண்ணிக்கொண்டு பாடவில்லை. சிவஞானி யல்லவா அவர்? அறுபத்து மூன்று நாயன்மார்களின் கதைக்கு ஏற்பத் தாமாகவே அறுபத்துமூன்று எழுத்துக்கள் வந்துள்ளன. பாடலைப் பதம் பிரித்து எழுத்துக்களை எண்ணினால் 72 வரும். இது தொகையடியார் ஒன்பதும் சேர்ந்து 72 ஆகும்.

மும்மலமுடைய ஆன்மாக்களுக்கு இறைவன் தோன்ற மாட்டான். மானுடச் சட்டை தாங்கி வருவான். அதனையே ''உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்'' என்பது உணர்த்துகின்றது.



இரு மலமுடைய ஆன்மாக்களுக்குச் சந்திரசேகரனாக வந்து காட்சியளிப்பான் என்பதை ''நிலவுலாவிய நீர்மலி வேணியன்'' என்பது உணர்த்துகின்றது.

ஒரு மலமுடையார்க்கோ அலகில் சோதியனாய்க் காட்சியளிப்பான். மூவருக்கும் பொதுவாக அம்பலத்தாடுவான். அப்பரமபதியினுடைய மலர் சிலம்படியை வாழ்த்தி வணங்குவோம் என்கிறார் சேக்கிழார்.

''மலர்சிலம்படி'' என்று வருகிறது.

மலர் என்ற சொல்லுக்குத் தாமரை என்று பொருள் கொள்ளுவது பொருந்தாது. மலர் என்ற சொல்லுக்கு, மலர்தலைச் செய்கின்ற தொழில் என்று மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் உரை செய்திருக்கிறார்கள். மலர்தல் என்றால் வெளிப்படுதல் என்று பொருள். சிலம்பு அந்த ஆண்டவனின் திருவடியில் உள்ள ஆபரணம். எல்லா உலகங்களும் இறைவன் திருவடியில் தோன்றுகின்றன.

'' போற்றியருளுக நின் தோற்றமாம்
பொற்பாதம் ''

உலகங்களை மலரச் செய்கின்ற சிலம்புடன் கூடிய சரணத்தை வாழ்த்திச் சிந்தித்து வந்திப்போம் என்று சேக்கிழார் பெருமான் இப்பாயிரப் பாடலில் கூறுகின்றார்.

திருத்தொண்டர் புராணத்தைப் பற்றி ''எடுக்கும் மாக்கதை'' என்று சேக்கிழார் பெருமான் ஒரு குறிப்புத் தந்தார் என்று முதலில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதற்கு எத்தனையோ பொருள் கூறலாம்.

பிறவிப் பெருங் குழியிலிருந்து மக்களை எடுக்கும் மாக்கதை என்று சொல்லலாம். நம்முடைய துன்பங்களையெல்லாம் எடுக்கும் மாக்கதை என்று சொல்லலாம்.

திருவெண்ணெய்நல்லூரில் இருந்துகொண்டு கம்பர் பெருமான், எங்கோ இருந்த கோசல நாட்டைப் பாடினார். அவரைப் போன்றே வில்லிப்புத்தூர் ஆழ்வாரும் அஸ்தினபுரத்தைப் பாடினார். ஆனால் சேக்கிழார் பெருமான் சோழவள நாட்டைப் பார்த்துக் கொண்டே அந்நாட்டைப் பாடினார். அவரது புராணத்திலே வருகின்ற நாயன்மார்களும் அந்த நாட்டிலேயே வாழ்ந்தார்கள்!

ஒன்றைப் பார்க்கின்ற போது ஞானிகளுக்கு உயர்ந்த பொருள் நினைவுக்கு வரும். சோழவள நாட்டில் காவிரி ஆறு பாய்ந்து அந்த நாட்டையே வளப்படுத்துகிறது. இறை வணக்கத்துக்குப் பின் சேக்கிழார் பெருமான் காவிரி பாயும் சோழவள நாட்டின் காட்சிகளையே அதிஅற்புதமாக வர்ணிக்கிறார். அந்த வர்ணனைகளிலும் தெய்வீக மணமல்லவா கமழ்கிறது!

(தொடரும்)

# சதி! சதி! சதி! விதி

ஆரம்பத்தில் சாதாரணச் சிப்பாயாகத் தம் வாழ்க்கையைத் தொடங்கிய இவர் தம் முயற்சியாலும், ஆற்றலாலும், விரைவிலேயே தளபதி எனப்படும் மார்ஷல் பதவியை அடைந்தார். இவரது தலைமையின் கீழிருந்த வீரர்கள் 1958ம் ஆண்டு அந்நாட்டில் அப்பொழுது பதவியிலிருந்த அரசரின் அரண்மனையைச் சுற்றி வளைத்து முற்றுகையிட்டு, அவ்விளம் அரசரைச் சுட்டுக் கொன்று இரத்த வெள்ளத்தில் மிதக்க விட்டு விட்டு அரசருக்கு ஆலோசகராக இருந்த அவரது சிறிய தகப்பனாரையும் படுகொலை செய்தனர். இக்கொலைகளுக்குப் பின்னும் நாட்டின் ஆட்சிப் பொறுப்பைக் கைப்பற்றிய சர்வாதிகாரிக்கும், படுகொலைகளை நடத்திய தளபதிக்கும் இடையே சிறிது காலத்துக்குள் மனத்தாங்கல் ஏற்பட்டது.

**சதி-1**

அதன் விளைவாய் இராணுவ நீதி மன்றத்தால் தளபதிக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. ஆனால் தளபதிக்கு எதிராய் அத்தண்டனையை நிறைவேற்றாமலும், அதே சமயம் தண்டனையைக் குறைத்து விடாமலும் எப்படியோ தளபதிக்கு உயிர்ப்பிச்சை அளித்துக் காப்பாற்றினார் அந்தச் சர்வாதிகாரி.

சிறிது காலத்துக்குப் பின்னர் தளபதி சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டுப் பொது வாழ்வில் ஈடுபடாது வாழ அனுமதிக்கப்பட்டார். துப்பாக்கி பிடித்த தளபதியின் கைகளால் நீண்ட நாட்கள் வேலையின்றி இருக்க முடியவில்லை.

**சதி-2**

1963 பிப்ரவரியில் தமக்குப் போதிய ஆதரவாளர்களைத் திரட்டிக் கொண்டு தமக்கு உயிர்ப்பிச்சை அளித்த சர்வாதிகாரிக்கு எதிராகத் துப்பாக்கியைத் திருப்பி நாட்டின் ஆட்சிப் பொறுப்பைக் கைப்பற்றினர். சர்வாதிகாரிக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. தாம் முன்னொரு சமயம் தளபதிக்கு அளித்த உயிர்ப் பிச்சையை நினைவுபடுத்தித் தம்மை விடுவிக்குமாறு தளபதியிடம் வேண்டினார் 'பழைய' சர்வாதிகாரி. அவ்வேண்டுகோள் புதிதாக ஆட்சிப் பொறுப்புக்கு வந்துவிட்ட தளபதியின் காதுகளில் விழவில்லை. இவ்விஷயத்தில் தாம் தலையிட முடியாது என்று கூறி இம்மாதிரியான ஒரு ஆபத்திலே சர்வாதிகாரி தமக்குச் செய்த உதவியை அவருக்குத் திருப்பிச் செய்ய மறுத்துவிட்டார் தளபதி. முடிவு — தளபதிக்கு உயிர்ப் பிச்சை அளித்த 'பழைய' சர்வாதிகாரி தளபதியின் உத்தரவின் பேரில் நாற்காலி ஒன்றின்பேரில் உட்கார வைத்துச் சுட்டுக் கொல்லப்பட்டார்.

**சதி-3**

செய்நன்றிகொன்ற அந்தத் தளபதி 1966 ஏப்ரல் 13-ஆம் தேதி ஹெலிகாப்டர் விபத்தில் மரணமடைந்த ஜனாதிபதி மார்ஷல் அப்துல் சலாம் ஆரிப். தளபதிக்கு உயிர்ப் பிச்சை வழங்கிய சர்வாதிகாரி: ஜெனரல் காசிம்.

**விதி**

தளபதியின் ஆட்களால் சுட்டுக் கொல்லப்பட்ட அரசரின் பெயர் — பைசல்.

கொலைக் காட்சி நடந்த இடம் — ஈராக்.

தகவல்: ப. ராஜாமணி எம். ஏ.,

## செக்கு மாடுகள்

சிங்கப்பட்டி ஜமீந்தார் வீட்டுக்குக் கோவில்பட்டி ஜமீந்தார் விருந்தினராக வந்திருந்தார். அன்றிரவு விருந்து முடிந்ததும் அவசர அலுவலாக அப்போதே வீடு திரும்ப எண்ணினார் விருந்தினர். உடனே சவாரி வண்டி கட்டப்பட்டது. விருந்தினரை அனுப்பிவிட்டுச் சிங்கப்பட்டி ஜமீந்தார் கதவை மூடிக் கொண்டு படுத்து விட்டார். படுக்கை விரித்த வண்டியாதலால் வண்டியிலேயே தூங்கிக்கொண்டு சென்றார் கோவில்பட்டி ஜமீன்தார். வண்டியோட்டுபவனும் மாடுகளைப் பூட்டிவிட்டுப் படுத்து விட்டான். ஏனெனில், பல முறை இதுபோன்றே சென்று பழக்கம். வண்டி ''ஜல் ஜல்'' என்ற சத்தத்துடன் சென்று கொண்டிருந்தது.

பொழுது புலர்ந்தது. கண்ணைக் கசக்கிக் கொண்டு எழுந்தார் கோவில்பட்டி ஜமீந்தார். எழுந்தவர் திடுக்கிட்டார். ஏனெனில், வண்டி சிங்கப்பட்டியிலேயே இருந்தது. நிம்மதியாக உறக்கத்தில் இருக்கும் வண்டிக்காரனை எழுப்பினார் ஜமீன்தார். அதன் பின்புதான் வண்டிக்காரன் செய்த ஒரு மாபெரும் தவறு தெரிய நேர்ந்தது. அவன் சவாரி மாடுகளைக் கட்டுவதற்குப் பதிலாகச் செக்கு மாடுகளைக் கட்டிவிட்டான். அம்மாடுகள் புறப்பட்ட இடத்திலேயே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன!

— சி. இராமலிங்கம்



மூன்றுக்கு மேற்பட்ட இலக்கமுள்ள ஏதாவது ஓர் எண்ணை எழுதிக் கொள்ளுங்கள். அந்த எண்களை அப்படியே கூட்டிக் கீழே எழுதுங்கள். முதலில் எழுதிய எண்ணிலிருந்து இந்த எண்ணைக் கழித்துவிடுங்கள். வரும் மீதத்தில் ஏதாவது ஓர் எண்ணை அடித்துவிட்டு எஞ்சியுள்ள எண்களை மட்டும் சொல்லுங்கள். அடித்த எண்ணைச் சொல்லி விடலாம்! எப்படி?

(விடை 44ம் பக்கம்)



# தியாகம்

ஆற்றங்கரை ஓரத்திலிருந்த ஒரு கல்லின் மேல் தான் கொண்டு வந்திருந்த அழுக்குத் துணிகளை அடித்துத் துவைத்துக் கொண்டிருந்தான் ஒரு சலவைத் தொழிலாளி.

"அழுக்கடைவது துணி; அதை வெளுக்கும்போது அடிபடுவது நீ. ஆஹா, உன் தியாகமே, தியாகம்!" என்று கல்லைப் புகழ்ந்தது கழுதை.

"மன்னியுங்கள்; துணி வெளுக்கப்படும்போது நானும் வெளுக்கப்படுகிறேன் என்பதை நீங்கள் மறந்து விட்டீர்கள்!" என்றது கல், உண்மையை மறைக்க விரும்பாமல்.

அசடு வழிந்த கழுதை ஆற்றைப் பார்க்க, அது கல்லைப் பார்த்து முணுமுணுத்தது.

"பிழைக்கத் தெரியாத தியாகி, பிழைக்கத் தெரியாத தியாகி!"

## வீண் ஆடம்பரம்

பஞ்சாபில் கபூர்தலாவுக்கு ஒரு பெரிய நீர்ப் பாசனத் திட்டத்தை நேரு ஆரம்பித்து வைத்தார். நிலத்தைத் தோண்டும் பணியை நேருவே தம் கையால் தொடங்கி வைக்க ஏற்பாடாகியிருந்ததால் விழாத் தலைவர் ஒரு வெள்ளிக் கடப்பாரையை நேருவின் கையில் கொடுத்தார். நேரு அதை ஒரு கணம் முறைத்துப் பார்த்தார். உடனே அதைத் தூக்கி எறிந்து விட்டார். பக்கத்தில் கிடந்த ஓர் இரும்புக் கடப்பாரையை எடுத்து நிலத்தைத் தோண்ட ஆரம்பித்தார். அருகே இருந்த அதிகாரிகளையும் காங்கிரஸ்காரர்களையும் நோக்கி, "இந்திய விவசாயிகள் வெள்ளிக் கடப்பாரையை வைத்துக் கொண்டா வேலை செய்கிறார்கள்? எதற்கு இந்த ஆடம்பரம் எல்லாம்?" என்று கோபத்துடன் கேட்டார்.

- இரா. தங்கராஜ்



"பத்து வருடங்களாகக் கதை எழுதி அனுப்பியதில் இன்றுதான் பதினைந்து ரூபாய் கிடைத்தது!"

"அப்படியா? எந்தப் பத்திரிகையில் உன் கதை வந்திருக்கிறது?"



"கதை ஒன்றும் பிரசுரமாகவில்லை. இவ்வளவு நாட்களாகத் திரும்பிவந்த கதைகளையெல்லாம் இன்றுதான் விலைக்குப் போட்டேன்!"



## டெர்ன்ஸ்ட்ரோ மியாஸீயா

என்ன பெரிய பெயராக இருக்கிறதே என்று குழம்புகிறீர்களா? ஒன்றுமில்லை, சாதாரணமாக நாம் குடிக்கும் டீயினுடைய பெயர்தான் இது. இவ்வளவு பெரிய வார்த்தையைப் பொறுமையாகச் சொல்ல இயலாததால் டீ எனச் சுருக்கிக் கொண்டனர். இப்பெயர் எப்படி வந்தது தெரியுமா? டெர்ன்ஸ்ட்ரோம் என்பவர் புகழ்பெற்ற சுவீடன் நாட்டுத் தாவர இயலறிஞர். தாவரங்களுக்கு விஞ்ஞானப் பெயர்களைச் சூட்டியவர் அவரே. தேயிலைக்கு அவர் சூட்டிய பெயர் 'தியாசைனன்சிஸ்' என்பது. பின்னர் அவருடைய பெயரே டீக்குச் சூட்டப்பட்டது.

## கருணை



தூண்டில் முள்ளில் குத்தப்பட்டிருந்த ஒரு புழு துடித்துக் கொண்டிருந்தது. அதைப் பார்த்த ஒரு மீன், ''ஆஹா, மனிதனின் கருணையே கருணை! எனக்காக அவன் எங்கேயோ இருந்த புழுவைத் தேடிப் பிடித்து, தூண்டில் முள்ளில் வேறு குத்தித் தண்ணீரில் அல்லவா விட்டிருக்கிறான்?'' என்றது நன்றியுடன்.

''அட முட்டாளே! அவன் உன்னைப் பிடித்துச் சாப்பிட அதை ஏவி விட்டிருக்கிறான்!'' —தவளை.

''நன்றிகெட்டதனமாகப் பேசாதே! எப்போதும் நல்லதையே நினை. நல்லது நினைத்தால் நல்லது நடக்கும். கெட்டது நினைத்தால் கெட்டது நடக்கும்!''

''செய் அப்பனே செய்; உனக்கு எது நல்லதோ அதையே செய்!'' என்றது தவளை.

அவ்வளவுதான்; துடித்துக் கொண்டிருந்த புழுவை விழுங்கிய மீன் துடித்துக் கொண்டே, ''ஐயோ ஏமாந்தேனே!'' என்றது பரிதாபமாக.

''நன்றிகெட்டதனமாகப் பேசாதே! கெட்டதை நினைத்தால் கெட்டது நடக்கும்; நல்லதை நினைத்தால் நல்லது நடக்கும்!'' என்றது தவளை. — விந்தன்



## பல கோணங்களில் ஒரு கார்!

ஒரு குடும்பம் கார் வாங்கப் புறப்பட்டால், ஒரு காலனுக்கு எத்தனை மைல் ஓடும் என்று குடும்பத் தலைவர் கேட்கிறார்; எவ்வளவு வேகம் போகும் என்று மகன் கேட்கிறான்; சீட்டுகள் என்ன நிறம் என்று மனைவி கேட்கிறாள்; ரேடியோ எவ்வளவு சவுண்டு கொடுக்கும் என்று மகள் கேட்கிறாள்.

பக்கத்து வீட்டுக்காரர்கள் கேட்கிறார்கள்: ''எங்கே யிருந்துதான் இவர்களுக்குப் பணம் புரள்கிறதோ?''

எம். எம். கே.

மனைவி: கோடிவீட்டு கோமளம், பக்கத்துவீட்டு பங்கஜம், எதிர் வீட்டு லக்ஷமி நாங்க மூணு பேரும் ஒன்றாகப் படித்து, ஒரே ஆபீஸிலே வேலை செய்கிறோம்!

கணவன்: இதென்ன ஆச்சரியம்! கோடிவீட்டு கோதண்டம், பக்கத்துவீட்டு பத்மநாபன், எதிர் வீட்டு ஏகாம்பரம் நாங்கெல்லாம் ஒன்றாகப் படித்து, ஒரேமாதிரி நாங்கதானே சமைத்துப் போடுகிறோம்.





## காமிரா: 'மேட் இன்' சொர்க்கம்

அந்தப் புகைப்படக்காரர் உலகத்திலேயே சிறந்த காமிரா தம்மிடம் இருப்பதாக நண்பர்களிடம் சொல்லிக்கொண்டார். ''அது அவ்வளவு தொலைவில் உள்ள பொருள்களைக் கூடத் தெளிவாகக் காட்டவல்லது. நானே பொருளைக் குறிக்கொண்டு [illegible] அரை விநாடியில் [illegible] செய்து [illegible] கும் [illegible] 'லென்ஸை'க் [illegible] கொள்ளும். [illegible] படிம் 'கன' [illegible] ஜோர் உருவமும் [illegible] பிறகு தானே புது [illegible] கேத்திக் கொள்கிறது. 'டெவலப்' செய்ய எடுத்துக் கொள்ளும் நேரம் அரைக் கால் விநாடிதான்.''

''ஆஹா! அப்படியா? அதன் விலை என்ன?''

''விலையா? அவைகள் என் கண்களாயிற்றே!''

- இரா. சண்முகம்.

## ''அரைக் கண்ணன்!''

சிவனை முக்கண்ணன் என்கிறார்கள். உண்மையில் அரைக் கண்தான் அவனுடையது. ஏனெனில், சிவனுக்கு மூன்று 'கண்களாதலால் இடப் பாகத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் உமைக்கு ஒன்றரைக் கண்கள் சொந்தமாகின்றன. மீதி, சிவனுடைய பங்கு; ஒன்றரைக் கண்கள். அதில் திண்ணன் கொடுத்தது ஒரு கண். ஆகவே, சொந்தமான கண் அரைக் கண் தானே?

கணக்கிட்டவர்: கிருபானந்தவாரியார்
தகவல்: வேலோர்.





### சென்னையில் ருஷ்யப் படங்கள்

## "ஸ்வெத்லானு ஸ்வெத்லிச்னயா!"

பெயர் சட்டென்று வாயில் நுழைய வில்லையா? கவலைப்படாதீர்கள். இவர் ஒரு பெண்மணி. ருஷ்ய நாட்டுத் திரைப்பட நடிகை. சென்னையில் நடந்த ருஷ்யத் திரைப்பட விழாவில் கலந்து கொள்ள இவரும் வந்திருந்தார். ருஷ்யப் பிரதிநிதிகளுக்கு அளிக்கப்பட்ட ஒரு தேநீர் விருந்தில் கலந்து கொண்ட இவர், உலகத்தின் எந்த மூலை முடுக்கை எடுத்துக் கொண்டாலும் பெண்மையின் இலக்கணம் மாறுபடவில்லை என்பதை வெகு அழகாக எடுத்துக் காட்டினார். விருந்தில் இவர் ருஷ்ய மொழியில் பேசிய பேச்சை மொழிபெயர்ப்பாளர் கையோடு கையாக மொழிபெயர்க்க முடியாமல் திணறினார். ஏன்? பெண் பேசத் தொடங்கினால் இலேசில் முடிவதில்லை, இடையே இருக்கும் ஆணுக்குப் பேச வாய்ப்பே அளிப்பதில்லை என்பதனால் மட்டுமா? இல்லை, இல்லை; எல்லா ஆண்களையும் போலவே பெண்மையின் பேச்சிலே சொக்கிப் போன மொழிபெயர்ப்பாளர், 'அடி எடுத்துக் கொடுங்கள்' என்று கேட்கும்படியாயிற்று. அப்பொழுது அங்கே ஏற்பட்ட சிரிப்பொலியைக் கேட்ட ஸ்வெத்லானு அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் அணிகலன்களைப் பூண்டு நின்ற காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.

இவர் நடித்துள்ள படம், 'தி வுமன் வித் வயலட்ஸ்' ஆகும். இந்தப் படத்திலே தாய்மையின் அருமையைக் காண்கிறோம். என்றோ ஒரு நாள் பாலூட்டி வளர்த்த பாசத்தின் பெருமையைக் காண்கிறோம். வளர்ப்பு அன்னையாக வரும் பெண்மணியின் நடிப்பு பாராட்டுக்குரியது என்றால், கரம் பற்றிய கணவனையே (விலாடிமிர் இவா ஷோவ்) காதலனாகக் கற்பனை புரிந்து ஸ்வெத்லானு நடிக்கும் காட்சி அற்புதமானது என்று கூற வேண்டும். இவர் எத்தகைய மெருகேறிய நடிகை என்பதைக் காண்கிறோம் இந்தப் படத்திலே.

ருஷ்யக் கலாசாரத் தூதுகோஷ்டியின் தலைவராக வந்தவர் அல்டி கார்லிவ். இவரது படம் 'டினிலில் ஸ்டெப்.' மக்களின் நலனுக்காக உருவாகிய புரட்சியில் மாக்கட் தன்மையோடு மக்கட்தன்மையும் போட்டி போட்டுக் கொண்டு சிறப்பதைக் காண்கிறோம். படப் பிடிப்பின் நுணுக்கங்களையும் கண்டு மகிழ்கிறோம்.

'எ சோல்ஜர்ஸ் ஃபாதர்' என்னும் திரைப்படத்திலே போரின் பயங்கரத்தோடு தந்தையின் வாஞ்சையைக் கண்டு மெய் சிலிர்க்கிறோம். நாஜிகளோடு நிகழ்ந்த போரைப் படம் பிடித்துக் காட்டும் 'தி ராக்கெட்ஸ் ஷூட் நாட் பி லாஞ்ச்ட்' என்னும் படம் வெறி வெள்ளத்தினிடையிலும் இரக்கக் கசிவு எப்படி ஏற்படுகிறது என்பதைச் சித்திரிக்கிறது.

'மொராஸ்கோ' என்னும் படம் மந்திர — தந்திரக் காட்சிகளைக் கொண்டது. இந்தத் துறையிலே அநுபவம் பெற்றவர் அலெக்ஸாந்தர் ரோ. எனவே, அவர் பார்ப்பவர்களை மாயலோகத்துக்கே இட்டுச் செல்வதில் வியப்பில்லை.

'ஹி லவ்ஸ் மீ, ஹி லவ்ஸ் மீ நாட்' என்னும் படத்திலே நம் நாட்டோடு நெருக்கமுறும் கதையைக் காண்கிறோம். இனிய பாடல்களையும் இசையமைப்பையும் நுகருகிறோம். ருஷ்யர்களும் நம்மைப் போல் படம் எடுக்கிறார்கள் என்பதை என்னும் வேளையிலே நாம் இன்னொரு விஷயத்தையும் நினைவில் கொள்ள வேண்டும். நம்மைப் போல் அவர்கள் இன உணர்ச்சியைக் கிளறி விடவில்லை.

இந்தப் படங்களோடு நாலுக்கொரு டாக்குமெண்டரியாகக் காட்டிய படங்களிலே ருஷ்ய நடனக் கலை பற்றிய படத்தையும், தாஷ்கெண்ட் சந்திப்பையும் குறிப்பிட வேண்டும்.

இந்தக் கலை விழாவுக்கே சிகரம் வைத்தாற்போல் அமைந்த படம் 'தி டூ'வாகும்.



நடாஷா ஓர் ஊமைப் பெண். ஊமையாக இருந்தாலும் அவளுக்கும் உணர்ச்சிகள் உண்டல்லவா? ஸர்ஜே என்னும் வாலிபன் அவளைக் காதலிக்கிறான். தன் காதலனுக்கேற்ற காதலியாகத் திகழ அவள் எடுக்கும் முயற்சிகள் மனத்தில் பதிகின்றன. விக்டோரியா லிபையோ தோரோவா என்னும் நடிகையும் வாலன்டீன் ஸ்மிர்னிட்ஸ்கே என்ற நடிகரும் நடிப்பின் சிகரத்தையே எட்டிப் பிடித்து விடுகிறார்கள். முக்கால்மணி நேரத்துக்குள் முழு வாழ்க்கையையும் ரசித்த இன்பத்தைப் பெறுகிறோம் இந்தப் படத்திலே.

இந்த ருஷ்யக் கலை விழாவில் திரையிடப்பட்ட படங்களைப் பொதுமக்களைக் காட்டிலும் திரைப்படத் தொழிலில் உள்ளவர்களே அதிகமாகப் பார்த்திருப்பார்கள். எங்கேயாவது அருவருப்பைத் தூண்டி விடும் ஆபாசக் காட்சியைக் கண்டிருப்பார்களா? பிற நாட்டு நடை, உடை, பாவனைகளைக் கண்டிருப்பார்களா? இதை மனத்தில் கொண்டு அவர்கள் நம் நாட்டுக் கலாசாரத்தைப் பிரதிபலிக்கும் நல்ல படங்களைப் பார் மெச்சும் வகையில் எடுப்பதுதான் இந்தப் பட விழாவுக்கு வெற்றி தருவதாகும்.

# இரவில் சென்னை

நாடகம்

தலைப்பைக் கண்டு சென்னை நகரத்தில் இரவில் நடைபெறக் கூடிய காமக் களியாட்டங்களைக் கேலி செய்யும் நோக்கத்தால் காண்பித்துப் பயமுறுத்துவார்களோ என்று நினைப்பவர்களும், அதையே ஆவலுடன் எதிர்பார்த்து வருபவர்களும் இரு சாராரும் இந்த அம்சம் சிறிதும் இந்நாடகத்தில் இல்லாததைக் கண்டு ஏமாற்றமடைந்தாலும், மிக உயர்தரமான ஹாஸ்யத்தைக் கேட்டு வயிறு வெடிக்க இரண்டரை மணி நேரம் சிரிக்க முடிந்ததே என்ற திருப்தியுடன் நாடகக் கொட்டகையை விட்டு வெளியே வருவார்கள். ஹாஸ்யத்தை விரும்பாதவர்கள் யார்?

ஹாஸ்ய நாடகமாயினும், இன்றைய சமுதாயத்துக்கு வேண்டிய படிப்பினைகள் இந்நாடகத்தில் சூட்சமமாகத் தொக்கி நிற்கச் செய்திருப்பது இந்நாடகத்தின் சிறப்பு அம்சம்.

கதையை விட வசனத்திலேயே கவனம் செலுத்தி நாடகத்தை இயக்குவதனால் திரு சோவின் நாடகங்களில் ஒரு குறை தென்படுகிறது. நகைச்சுவையை அந்த நேரத்தோடு ரசித்துவிட்டு மறந்து விடுகிறோம். வசனத்தையே பிரதானமாகக் கொள்வதனால் நடிப்பிலும் ஒரே மாதிரியான நடிப்பைக் கண்டு அலுப்பு ஏற்படுகிறது. நாடகம் குறை நீங்கிப் பரிமளிக்க வேண்டுமானால் இந்தக் குறைகள் நீக்கப்பட வேண்டும் என்பதைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

டீ. ஸ்டால் வடிவேலாக வரும் திரு நீலகண்டன் எவ்வளவு நேர்த்தியாக நடிக்கிறார்! மாப்பிள்ளை மாணிக்கம் என்ற போலீஸ்காரராக வரும் நண்பர் சோ தாம் ஒரு பிறவி நடிகர் என்பதை மீண்டும் நிலைநாட்டி விடுகிறார். சாதாரண சமயங்களில் சோவைப் பார்த்தவர்கள், நல்ல புத்திசாலிக் களை பொருந்திய முகத்தைப் படைத்தவர் என்றுதான் சொல்வார்கள். ஆனால் மாப்பிள்ளை மாணிக்கமாகத் தோன்றி அவர் முகத்தில் எப்படி இவ்வளவு அசட்டுக் களை கொண்டுவர முடிந்தது என்பதுதான் வியப்புக்குரிய விஷயம்.

அப்படியேதான் தையல்காரராக நடிக்கும் காதருக்கு ராவணனுடைய பத்துத் தலைகளைப் பற்றிப் பலவித சந்தேகங்கள் எழ, அவர் பார்ப்பவர் வயிற்றைப் புண்ணாக்கிவிடுகிறார். ஒரு தெருக்கூத்து வருகிறது. அடடா! அதுதான் எவ்வளவு பிரமாதம், போங்கள்!

மொத்தத்தில் எல்லா நடிகர்களுமே சிறப்பாக நடித்து, 'நாங்கள் அமெச்சூர்களா' என்று கேட்காமல் கேட்கின்றனர்.

''இல்லை! இல்லை!'' என்று நாமும் சிரித்துச் சிரித்து அவர்களுக்குப் பதில் கூறுகிறோம்!



## திருமணம்



சக்கரமல்லூர் விசாலாக்ஷி அம்மாள் ஸ்வீகாரப் புத்திரன் சிரஞ்சீவி கே.என். சுப்பிரமணிக்கும், கலவை ஏ. கே. நாராயணசாமி நாயுடு புத்திரி சௌ. புவனேஸ்வரிக்கும் காஞ்சிபுரம் பட்டு ஜவுளி வியாபாரம் ஜி. தங்கவேல் முதலியார் அவர்கள் முன்னிலையில் காஞ்சிபுரத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. வாழ்க மணமக்கள்!

## திருமணம்



பம்பாய் லிண்டாஸ் லிமிடெட் ஸ்தாபனத்தைச் சார்ந்த சி. ஆர். எஸ். மணி அவர்கள் குமாரத்தி சௌ. விசாலாக்ஷிக்கும், பம்பாய் பிராந்திய பயர்ஸ்டோன் காரியாலயத்தைச் சார்ந்த சிரஞ்சீவி எல். எஸ். நடராஜன் அவர்களுக்கும் பம்பாயில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

## திருமணம்



ரானே (மதராஸ்) லிமிடெட்டின் மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ T. G. K. ராமன் அவர்கள் சகோதரி சௌ. சித்ராவுக்கும் கேரளா ஸ்டேட், ஓய்வுபெற்ற P. W. D. பிரதம என்ஜினீயர் ஸ்ரீ T. S. நாராயணசாமி அய்யர் B. E. அவர்கள் குமாரன் சிரஞ்சீவி T. N. சுந்தரேசன் அவர்களுக்கும் திருமணம் சமீபத்தில் சென்னையில் வெகு சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு உறவினர்களும், நண்பர்களும், நகரப் பிரமுகர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்திச் சென்றனர்.

வாழ்க மணமக்கள்!

# கோபால கிருஷ்ண கோகலே



டி.வி.குண்டப்பா

புதியது என்று சொல்லக் கூடிய எந்தக் கொள்கையையும் கோகலே அரசியலுக்கு அளிக்க வில்லை. புது சித்தாந்தம் எதையும் அவர் ஸ்தாபிக்க வில்லை. வீரர்களையும் தொண்டர்களையும் திரட்டித் தலைமைதாங்கித் தீர சாகஸங்களை அவர் புரிய வில்லை. எந்தக் காலத்துக்கும் எந்த நிலைமைக்கும் பொருந்தும்படியான விரிவான விதி முறைகள் அல்லது வழி வகைகள் எதையும் அரசியலார்க்கு அவர் வகுத்துத் தரவில்லை. தாம் வாழ்ந்த காலத்தில் தமது நாட்டு மக்களுக்கு அவசியமாகத் தேவைப்படுவது எது என அவர்' கருதினரோ அதை மட்டும் பெற்றுத் தருவதையே தமது முக்கிய பணியாக அவர் மேற்கொண்டார். அந்தத் தேவை மக்களுக்கு





நல்ல ஆட்சி கிடைக்கச் செய்வதுதான் என்று அவர் கருதினர். நல்லாட்சி என்னும்போது நாம் இந்தக் காலத்தில் என்ன பொருளைக் கொள்ளுகிறேமோ அதே அர்த்தத்தைத்தான் அவரும் 'தம் காலத்தில் சொன்னர். அதாவது அரசாங்கத்தின் ஒவ்வோர் அங்கமும் அதற்குச் சட்டப்படி விதிக்கப்பட்ட அலுவல்களை ஒழுங்காகச் செய்ய வேண்டும்; சர்க்கார் செலவுகளில் சிக்கனம் அனுஷ்டிக்கப்பட வேண்டும் ; வரிகளின் சுமை கூடுமான வரை குறைவாகவே இருக்க வேண்டும்; மக்களின் அபிப்பிராயங்களுக்கு அரசாங்கம் செவி சாய்க்க வேண்டும்; மக்களுடைய சக்தி வீணுகாமல் காத்து அவர்களுடைய முயற்சிகளுக்கு வசதிகளும் ஊக்கமும் அளித்து அவர்களது உழைப்பு தங்கு தடையின்றிப் பெருகி வர உதவ வேண்டும்.

இவைதான் நல்லாட்சிக்கு கோகலே தந்த வியாக்கியானம்.

சுருங்கச் சொன்னல், சமூகத்தின் தற்காலத்திய நலன்களைக் கவனித்துப் பெறுவதுடன், வருங்காலத்தில் சுபமாகவே சமூகம் முன்னேறி வளம் பெறுவதற்கு வாய்ப்பான அரசாங்கத்தையே







முதல் பக்கத்தில் :

1. கோபால கிருஷ்ண கோகலே 1914ம் ஆண்டில்.
2. அவரது இறுதி யாத்திரையில் கலந்து கொண்ட திலகர் ஈமச் சடங்குகளுக்குப்பின் உரையாற்றுகிறார்.
3. பூனாவில் கோகலே தம் குடும்பத்தாருக்குக் கட்டிய வீடு. ஆனால் இதில் அவர் வசிக்கவில்லையாம் !

இந்தப் பக்கத்தில் :

1. வெல்பி கமிஷன் அங்கத்தினராக லண்டனுக்குச் சென்ற கோகலே துரை !
2. தாதாபாய் நௌரோஜி, ஸர் டி. ஈ. வாச்சா ஆகிய இருவருடன் கோகலே.
3. லண்டனுக்கருகிலுள்ள லேங்ஹாம் காட்டேஜில் ரட்டன் டாட்டா குடும்பத்தினரோடு விருந்தினர் கோகலே.

அவர் விரும்பினார். "வெகுதூரத்தில் தெரியும் உன்னதமான தோற்றத்தைப் பார்த்துக் கொண்டிருக்க நான் ஆசைப்படவில்லை. அதை நோக்கி ஓர் அடி எடுத்து வைத்தாலும் போதும்; நான் திருப்தி கொள்வேன்" என்றார் கோகலே.

தூரத்துத் தோற்றம் என்று அவர் சொன்னது இந்தியாவின் சுதந்திரம்தான். தமது வாழ்நாளில் இது கிட்டாது என்பதை அவர் நன்றாகவே உணர்ந்தார். அதை அடைய அவர் முயலவும் இல்லை. ஆனால் அதற்காக, அந்தப் பாதையில் ஓர் அடி முன்னால் எடுத்து வைக்கவே அவர் விரும்பினார். பாதை மிக நீண்டது: ஆகவே, பகுதி பகுதியாகத்தான் அதைக் கடக்க வேண்டும் என்றும் அவர் தெளிந்தார். ஒரு பகுதியைக் கடப்பதை மட்டும் அவர் தமது லட்சியமாக வைத்துக் கொண்டார். இவ்வாறு தமது லட்சியத்தை வரையறை செய்து கொண்டதே கோகலேயின் தனிச் சிறப்பு. உருப்படியாக ஏதாவது செயலில் சாதிக்க வேண்டுமானால், எந்தத் துறையிலும் செயலுக்கு ஒரு வரம்பு கட்டிக் கொள்ளவேண்டும். காரியசித்திக்கு இன்றியமையாதது ஏகாக்கிர முயற்சியே. இது கோகலேயின் சித்தாந்தம்.

இதை அவர் வாயிலாகவே கேட்போம். 1908ம் ஆண்டில் சென்னையில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரஸின் 23வது கூட்-

டத்தில், அப்போதுதான் செயலுக்கு வந்திருந்த மிண்டோ – மார்லி சீர்திருத்தங்கள் பற்றிக் கோகலே பேசினார்.

''இந்தச் சீர்திருத்தங்களால் ஏற்படக்கூடிய மாறுதலைச் சுருக்கமாகச் சொல்கிறேன். இது வரையில், நாம் வெளியில் இருந்து கொண்டே கிளர்ச்சி செய்து வந்தோம். இனி அரசாங்கத்துடன் பொறுப்புள்ள கூட்டாளிகளாக நாம் செயல்படப் போகிறோம். இதனால் நமக்கு நிர்வாக அதிகாரம் கிடைத்து விட்டது என்று அர்த்தமல்ல. ஆனால் இத்துறையில் நாம் வளர்ச்சியடைவதற்கு இங்கே அநேகம் வாய்ப்புகள் இருக்கின்றன. நமக்குக் கிடைத்துள்ள கடமைகளைச் சரிவர நிறைவேற்றி, சந்தர்ப்பங்களைச் சீராகப் பயன்படுத்தக் கற்றுக் கொண்டால், படிப்படியாக நாம் முன்னேற்றம் அடைவதுடன் பொறுப்பான முறையில் நிர்வாகப் பணிகளைக்கூட நாம் ஏற்கக்கூடிய நிலைமைக்குச் செல்லலாம். கிளர்ச்சியிலிருந்து கொஞ்சம் பொறுப்புக்களுடன்கூடிய ஒத்துழைப்பு என்ற நிலையை அடைவது முதல் படி. இதற்கு அடுத்த படியில் அடி எடுத்து வைப்பது மிகவும் சிரமசாத்தியமான களைப்பூட்டும் விஷயம்தான். காலதாமதமும் ஆகும். அந்த அடுத்த கட்டம் நிர்வாகப் பொறுப்பை ஏற்பது என்பது தான்.

இது நிகழ்ந்த ஒன்பது ஆண்டுகளுக்குப் பின் — 1917ம் ஆண்டில் – மாண்டேகு, 'இந்தியர்களுக்கு அரசாங்கப் பொறுப்பை அளிப்பதுதான் பிரிட்டிஷாரின் லட்சியம்' என்று அறிவித்தார்.

நாட்டின் சுதந்திரத்துக்காகத் தமது போராட்டத்தை மகாத்மா காந்தி உருவாக்கிக் கொண்டிருந்த போது, அவருடைய நண்பர் ஒருவர், ''இந்தப் போராட்டம் முந்திய போராட்டங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டதல்லவா?'' என்று வினவினார். அதற்குக் காந்திஜி, ''1945ம் ஆண்டு 1935ம் ஆண்டு அல்ல'' என்று ரத்தினச் சுருக்கமாகப் பதில் சொன்னாராம். இது சமத்காரமான பதில் மட்டும் அல்ல. வரலாற்றில் பொதிந்துள்ள உண்மையை விளக்கும் வாக்கியம் இது. நமது திட்டங்களிலும் முயற்சிகளிலும், காலம் எப்போதும் பெரும் பங்கு வகிக்கிறது. ஒருவர் தமது முயற்சிகளில் எந்த அளவுக்கு வெற்றி பெற்றிருக்கிறார் என்பது சூழ்நிலையின் சாதக பாதகங்களைப் பொறுத்தேதான் அமையும். சூழ்நிலைகளைப் பக்குவமாக்கிக் கொடுப்பது காலத்தின் வேலை. எதற்கும் உகந்த காலம் உண்டு. ருதுக்கள் எப்படி மாறுகின்றனவோ அப்படித்தான் மக்களின் மனவெழுச்சிகளிலும் ருதுக்கள் ஏற்படுகின்றன. அநுபவசாலியான விவசாயிக்கு வானிலை மாறுதல்களின் அறிவு எவ்வளவு அவசியமோ, அதே போலத்தான் ஓர் அரசியல் அறிஞருக்கு மக்கள் மனவெழுச்சி மாறுதல்கள் பற்றிய அறிவு அவசியம். இதைப் பொறுத்தே அரசியல்வாதியின் வெற்றியும் அமைந்திருக்கும்.

தேசிய இயக்கத்தின் ஓட்டம் ஒரு நதியின் ஓட்டத்தைப் போன்றது. ஆரம்பம் எங்கே என்று அறிய முடியாது. சொட்டுச் சொட்டாகக் கசிந்த நீர்த் துளிகள் குட்டையாகத் தேங்கி, அங்கிருந்து வாய்க்காலாக மெதுவாக ஆரம்பித்து, போகப் போக மற்றக் கால்வாய்களும், சிறு நதிகளும் சேரச் சேர, பிரவாகம் போல் விரிவடைந்து ஜீவநதியாகப் பரிணமிக்கிறது. மக்கள் இயக்கமும் இப்படித்தான். இந்தத் தேசிய இயக்க நதியின் போக்கில் கோகலேயின் ஆண்டு 1915. காந்திஜியின் ஆண்டு 1945. இரண்டுமே புனிதமுள்ளவைதான். ரிஷிகேசம் எப்படிப் புனிதமோ, அப்படித்தான் கங்கைக் கரையில் உள்ள பிரயாகை, காசி போன்ற இதர க்ஷேத்திரங்களும். கோகலேயைப் பற்றி நினைக்கும் போது, தேசிய இயக்கத்துக்கு உதவ மற்றத் தலைவர்களை விடச் சிறப்பாக அவர் இரண்டு காரியங்களைச் செய்தார் என்பதை நாம் ஞாபகப் படுத்திக் கொள்கிறோம்.

1. இந்தியாவுக்குச் சுதந்திரம் மிக அவசியம் என்பதை நிரூபித்தார்.
2. சுதந்திரம் பெற இந்தியா முற்றிலும் தகுதி பெற்றிருந்தது என்பதையும் நிரூபித்தார்.

அலங்காரச் சொற்களாலும், மேடைப் பேச்சுக்களாலும் இதை அவர் நிரூபிக்கவில்லை. தர்க்கரீதியாக, வாதத்தின் உறுதியினால், இவ்விரண்டு அம்சங்களையும் நிரூபித்தார். படித்தவர்கள், அறிவாளிகள் என்ற வர்க்கத்தினரிடையே இவ்விரண்டு விஷயங்களிலும் நிச்சயமான அபிப்பிராயங்களை முதலில் உருவாக்கினார். தாம் மேற்கொண்ட பணியில் இதையே முதல் பாகமாக, முக்கிய பாகமாகக் கருதினார். மக்களை ஊக்குவிப்பதும் விடுதலை இயக்கத்தை மக்களிடையே பரவச் செய்வதும் கோகலேயின் மதிப்பீட்டில் இரண்டாவது ஸ்தானம்தான் பெற்றன. மக்களைச் சுலபமாகத் தூண்டி விட்டு விடலாம். ஆனால் எந்த லட்சியங்களை நோக்கி அந்த மக்கட் சக்தியைச் செலுத்த வேண்டுமோ அவற்றில் படித்தவர்களிடையே நிச்சயத் தன்மை ஏற்படாவிட்டால், மக்கட் சக்தி கண்மூடித்தனமாகவே இயங்கிச் சிதறிப் போகும். இது கோகலேயின் சித்தாந்தம்.

பொது நலன் என்ற உருவமற்ற தெளிவற்ற சொல்லுக்குச் செயலில் வடித்துக் காட்டக் கூடிய உருவத்தைக் கொடுத்தவர் கோகலே. தூரத்துப் பச்சை போலப் பளபளப்பது பொது நலன் என்ற சொல். நெருங்கினும் நெளிந்து நெளிந்து உருவ மற்றுப் போகும். தூரம்தான் அதற்கு அளிக்கும் கவர்ச்சி. எல்லோரும் அதைக் கண்டு மயங்குவர். அதை அடைய ஒருவருக்கும் வகை தெரியாது. புஷ்பித்துக் குலுங்கும் ரோஜாச் செடியை எல்லோரும் கண் குளிரக் கண்டு ஆனந்திக்கலாம். ஆனால், ''இந்த மண்ணில் ரோஜாச் செடி பயிராகுமா? இந்தச் சீதோஷ்ண நிலை அதற்கு ஏற்றதா? ஜாதி ரோஜாச் செடி எங்கு கிடைக்கும்? அதை நடுவதற்கு எது ஏற்ற பருவம்?'' என்பது

# குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ

# ஃபாஸ்ஃபோமின்®

ஃபாஸ்ஃபோமின் பழரஸ மணம் கமழும் பச்சை நிற வைட்டமின் டானிக். இதில் வைட்டமின் 'பி' காம்ப்ளெக்ஸ் மற்றும் பலவகை கிளிஸரோ ஃபாஸ்பேட்டுகள் கலந்துள்ளது. இதுவே குடும்பத்தினர் அனைவரும் வலிவுடனும், சந்தோஷத்துடனும், ஆரோக்கியமாயும் வாழ உதவுவது. ஃபாஸ்ஃபோமின் வீட்டில் வையுங்கள். இதை அருந்தி வந்தால் களைப்பும் சோர்வும் உங்களை அணுகாது. இழந்த சக்தியை மீண்டும் பெற உதவுகிறது. பசியைத் தூண்டும். வலிவைப் பெருக்கும். நோய்களை எதிர்க்கும் சக்தியை அளிக்கும். குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியத்துடன் திகழ— ஃபாஸ்ஃபோமின்.




SQUIBB® ™®

SARABHAI CHEMICALS

Shilpi SC 281 A Tam

போன்ற கேள்விகளை எல்லோருமே கேட்க மாட்டார்கள். பொதுநலன் என்பது ரமணீயமான பூங்கா. இந்தப் பூங்காவில் வளரும் ஒவ்வொரு ரோஜாச் செடியும் குறிப்பிட்ட ஒரு நலன். பூங்காவைப் பற்றியே சிந்திக்காமல் ஒரு ரோஜாச் செடியை நட்டுப் பயிராக்குவதில் மட்டும் செயல்பட்டவர் கோகலே.

கண்ணுக்குப் புலனாகாமல் காற்றில் கலந்துவிடும் வாயு போன்ற பொது நலன் என்பதற்கு விளக்க உரை கூறிப் பொழுதைக் கழித்துக் கொண்டிராமல் நல்லதொரு வடிவத்தோடு கைக்கெட்டும் குறிப்பிட்ட ஒரு நலனைப் பேணி வளர்ப்பதில் அக்கறை எடுத்துக் கொண்டது கோகலேயின் தனிச் சிறப்பு, தனித் தன்மை.

அவர் எழுதிய ஒவ்வொரு வரியிலும் பேசிய ஒவ்வொரு சொல்லிலும் இந்தக் கருத்து புலனாகிறது. அவர் சட்டசபை கவுன்சிலில் ஆற்றிய எல்லாச் சொற்பொழிவுகளிலும் மக்களின் அன்றாட வாழ்க்கை அபிவிருத்தி அடைவதில் அவர் கொண்டிருந்த அக்கறை வெளிப்பட்டது.

சித்தாந்தக் கோட்பாடுகள், தத்துவக் கருத்து வேறுபாடுகள் இவற்றையெல்லாம் ஒதுக்கி வைத்து விட்டு, மக்களின் தினசரி வாழ்க்கையில் அவர்களைப் பாதிக்கும் விஷயங்களில் எந்தெந்த வழிகளில் அபிவிருத்தி காணலாம் என்பதற்குச் சாத்தியக்கூறான ஆலோசனைகள் கூறினார்.

தத்துவங்களிலும் அவற்றின் செயல்பாடுகளிலும் கோகலேயின் அறிவு அபாரம். எனினும், அவர் கவனமெல்லாம் குறிப்பிட்ட ஒரு கஷ்டத்திலிருந்து மக்களுக்கு நிவாரணம் அளிப்பதிலும், மக்களின் வாழ்க்கைத்தரம் உயர வழி வகுக்கக் கூடிய ஒரு சிறு வசதியைப் பெற்றுத் தருவதிலும்தான் இருக்கும். அதையே தமது முக்கிய வேலையாக கோகலே எண்ணிச் செயலாற்றினார்.

நமக்கெல்லாம் கோகலே புகட்டும் பாடம் இதுதான். வெளிநாட்டிலிருந்து இறக்குமதியான கொள்கையின் சிறப்புக்களைக் கூறிக் கொண்டிருப்பதைவிட, உள்நாட்டில் நிலவும் ஒரு குறைபாட்டினை உணர்ந்து அதை நிவர்த்திப்பதில் தமது முழுக் கவனத்தையும் செலுத்துவது முக்கியம் என்று அவர் கருதினார்.

எந்த ஒரு முனையிலேனும் ஒரு நிலைமையைக் கண்டெடுத்து விட்டால் அல்லது குறைபாட்டை அகற்றினால், அதுவே மற்ற முனைகளிலும் நிலைமைகள் தொடர்ந்து அகற்றப்பட வகை செய்யும் என்பது அவருடைய சித்தாந்தம். சீர்திருத்தத்தின் வடிவம், செயல், அளவு ஆகியவற்றைவிட சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்ற மனப்பான்மையையே அவர் முக்கியமாக எண்ணினார். ''பிரிட்டிஷார் செய்த தவறுகள் பிரிட்டிஷாராலேயே திருத்தப்படும்'' என்று யாரோ ஓர் ஆங்கிலக் கவி சொன்னார். கோகலே இந்தத் தத்துவத்தில் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தார். சுயமாக ஏற்படும் முன்னேற்றம்தான் உண்மையான முன்னேற்றம். நமது வியாதிகள் எல்லாம் நமது சரீரத்திலேதான் தோன்றுகின்றன. அவைகளுக்கான பரிகாரங்களும் அந்தந்தச் சரீரத்தின் தன்மையை அநுசரித்தே தேடிக் கொள்ள வேண்டும். குறிப்பிட்ட ஒரு நிலைமையில் நமது மக்கள் என்ன நினைப்பார்கள், எப்படி நடந்து கொள்வார்கள், குறைபாடுகளை நிவர்த்தி செய்து கொள்ள எந்தவித பரிகாரங்களைத் தேடிக் கொள்வார்கள் என்பதை நாம் உணருவது போல, அயல்நாட்டினர் எவ்வளவு புத்திசாலிகளாக இருந்தாலும், எவ்வளவுதான் அநுபவம் உள்ளவர்களானாலும் புரிந்து கொண்டு செயலாற்ற முடியாது. இதனால்தான் நாட்டுக்குச் சுதந்திரம் தேவைப்படுகிறது என்று வாதித்தார் அவர்.

செய்முறையில் கோகலே வகுத்துக் கடைப்பிடித்த கொள்கைகளையெல்லாம் சுருக்கமாக விளக்குவோம்.

1. **உண்மை நிலை ஆராய்தல்:** பொது மக்களுடைய குறைபாடுகளை ஆராய்வதில், குறைபாடுகளின் மூலக் காரணம், வளர்ச்சி, உருவம் மக்கள் எப்படிப் பாதிக்கப்படுகிறார்கள் ஆகியவற்றை உள்ளது உள்ளபடி உணர்தல் அவசியம். புள்ளி விவரங்களுடன் குறைகளின் பல உருவங்களையும் அலசி ஆராய




"என்னம்மா சுஜாதா! பழைய காலத்துப் பெண் மாதிரி கணவன் பெயரைச் சொல்ல வெட்கப் படுகிறாயே? சும்மா சொல்லு!"

"போங்க ஸார்! 'சுப்புணி' என்கிற அவருடைய கர்நாடகப் பெயரைச் சொல்லவே எனக்கு வெட்கமாக இருக்கு!"

வேண்டும். அடுக்குச் சொல், கண்டனம் முதலியவை உண்மையை உணர்த்தா. இவை உண்மையை மறைத்து, மாற்றி விடவும் செய்யும். நிலைமை பற்றிக் கேவலம் அபிப்பிராயம் மட்டும் போதாது. அபிப்பிராயம் சரியா என்று உண்மை நிலையுடன் உன்னிப்பாக ஒத்திட்டுப் பார்த்தல் வேண்டும்.

2. **மாற்று அபிப்பிராயம் அறிதல்:** எந்தப் பொது நிலைமை பற்றியும் தான் கொண்டுள்ள ஒரே அபிப்பிராயம்தான் இருக்க முடியும் என்று கருதுவது சரியாகாது. பல்வேறு மாற்றுக் கருத்துக்களும் ஒப்புக் கொள்ளக் கூடியவைகளாகவே இருக்கலாம். அதே போல், குறிப்பிட்ட நிலைமையில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் என்பதிலும் அபிப்பிராய பேதங்கள் இருக்கலாம். பசி எடுத்தவர்களுக்கெல்லாம் உணவு வேண்டும். ஆனால் எல்லோருக்கும் ஒரே வகையான உணவு அல்ல. ஒருவனுக்கு ஒரு வகை உணவு வேண்டுமென்றால், அதே உணவு மற்றொருவனுக்கும் வேண்டியிருக்கும் என்ற நியதி இல்லை. இம்மாதிரி காரணங்களினால் சமூகத்தில் பிரிவுகள் தோன்றுவது சகஜம். இந்த நிலைமையில் பொதுவாக ஒரு நன்மையைச் செய்ய வேண்டுமானால், மற்றவர்களின் மாற்றுக் கருத்துக்களையும் தெரிந்துகொண்டு, அவற்றில் உபயோகமுள்ள அம்சங்களைச் சொந்தக் கருத்துக்களுடன் பிணைத்தே பொது நடவடிக்கைகள் உருவாக்கப்பட வேண்டும். கோகலேயின் இடைவிடாத முயற்சி, மாறுபட்ட கருத்துக்களை அறிந்து, அவற்றின் சிறப்பு அம்சங்களைத் தமது சிந்தனைகளில் இணைத்துக் கொள்வதிலேயே சென்றது. இதுதான் விஞ்ஞான ரீதியும்கூட. ஏனெனில் விஞ்ஞானம் என்பது நல்லது, உண்மை, நியாயம் மூன்றையும் குறித்த நமது சிந்தனை உருவகங்களை மேன்மேலும் தெளிவுபடுத்திக் கொண்டே செல்லுவதாகும்.

3. **ஆக்க வேலைக்கான மனப்பான்மை:** எந்தவித பொதுப் பிரச்னையிலும் கோகலே ஆக்க முறையிலேயே தமது கவனத்தைச் செலுத்தினார். எந்தக் குறைபாட்டைப் பற்றியும் விரிவாக அலசிச் சொன்னால் மட்டும் போதாது. இதற்கு என்ன பரிகாரம் என்பதே அவருடைய கவலையாக இருந்தது. எந்த விவாதமும் செயல்முறைக்கு ஏற்ற ஒரு முடிவுக்கு இட்டுச் செல்ல வேண்டும் என்றே அவர் விரும்பினார். கண்டனம் செய்த போதெல்லாம், நிலைமையைத் திருத்துவது தமது பொறுப்பு அல்ல என்ற முறையில் அவர் கண்டித்ததில்லை. மாறாக, தமக்குச் சந்தர்ப்பமும் அதிகாரமும் இருந்தால் குறிப்பிட்ட குறைபாட்டை நிவர்த்திக்கத் தாம் என்ன செய்திருப்பார் என்பதை உணர்த்துவது தமது கடமை என்றே கோகலே கருதினார். இந்த மாதிரி ஆக்கமுறை மனப்பான்மை தான் சிந்தனை ஆற்றல் வாய்ந்த எந்தப் பொறுப்புள்ள பிரஜைக்கும் அரசியலைப் பயனுள்ள பணியாக அமைத்துக் கொடுக்கும்.

4. **கிடைத்ததைக் கொண்டு செயல்படும் ஆற்றல் :** ஏற்கனவே இயங்கிக் கொண்டிருக்கும் ஸ்தாபனங்களை முழுமையாகச் செயல்படச் செய்ய வேண்டும் என்று கோகலே விரும்பினார். பழைய ஸ்தாபனங்களைக் குறைபாடுகள் உள்ளவை என்று ஒதுக்கித் தள்ளுவது அநுகூலமல்ல. கிராமப் பஞ்சாயத்தானாலும், டவுன் நிர்வாகக் கவுன்சிலானாலும், நகரக் கமிட்டியானாலும் அவற்றையெல்லாம் அதனதனுடைய குற்றம் குறைபாடுகளுடனேயே ஏற்றுக் கொண்டு அவற்றை நல்ல முறையில் சீர்திருத்தி இயங்கச் செய்வதுதான் உகந்த வழி. ஸ்தாபன ரீதியில் இயங்கக் கற்றுக் கொள்ளும் சாமர்த்தியத்தை அப்பியசித்துத்தான் பெற வேண்டும். ஜனநாயகம், பிரஜாஉரிமை இவை இரண்டுமே இந்தியருக்குப் புதியவை. இவை சரிவரச் சீராக இயங்க வேண்டுமானால், நம்மிடம் புத்தி சாதுரியம் இருந்தால் மட்டும் போதாது. தரும — நேர்மை உணர்ச்சிகளையும் சிந்திக்கும் பழக்கத்தையும் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

புத்திபூர்வமான கொள்கை என்பது கணிதத்தில் வரும் ஒரு சூத்திரம் போன்றது. வாழ்க்கையின் யதார்த்த நிலைக்குச் சம்பந்தப்படாதது. ஆகவே புத்திபூர்வமான கொள்கையுடன் நல்லொழுக்க இலட்சியம் இணை சேராத வரை அது அன்றாட வாழ்க்கையில் காணும் யதார்த்த நிலைக்குப் பயன்படாது.

5. **பரிணாமத்தின் மூலம் முன்னேற்றம் :** முன்னேற்றம் உண்மையாகவும், ஸ்திரமாகவும் இருக்க வேண்டுமானால், மக்களுடைய சுயமுயற்சியினால் ஏற்பட்ட உயர்வாக அது இருக்க வேண்டும். நிர்ப்பந்தத்தினால் ஏற்படும் முன்னேற்றம் நீடித்து நிற்காது. அதன் பயனும், அப்போதைக்கு மேற்பார்வைக்குத் திருப்திகரமாகத் தோன்றினாலும் காலப்போக்கில் நிலைக்காது. ஒவ்வொருவனுடைய உள்ளத்திலும் தனது முன்னேற்றத்துக்கான உயர் சக்திகள் மறைந்து அமிழ்ந்து கிடக்கின்றன. இவற்றுக்கு விழிப்பூட்டி விட்டால், அவை பூரணமாக இயங்கத் தொடங்கும்போது மனிதனின் முன்னேற்றம் ஸ்திரமாக ஏற்படுகிறது. இதுதான் உண்மையான முன்னேற்றம். இது சுயேச்சையாக, நிதானமாக, ஸ்திரமாக, பரிணாம ரீதியில் நிகழ்கிறது. அரசாங்கமோ அல்லது ஒரு மத ஸ்தாபனமோ, நிர்ப்பந்தமாக, மக்களைக் கட்டுப்படுத்தி அவர்கள்

**கெட்டியின் இன்னிசை**



"உங்களைக் கஷ்டம் வாட்டியெடுக்கும்போது தேநீர்க் 'கெட்டி'லை நினைத்துப் பாருங்கள். கழுத்தளவு கொதிக்கும் நீர் இருக்கும் பொழுதும், அது இன்னிசையல்லவா எழுப்பிக்கொண்டிருக்கிறது!"

— ஓர் அறிஞர்

காலக்கண்ணாடி!
கருத்துப்பேழை!
எழுத்து எல்லாம் தேன்!
எண்ணமெல்லாம்
விரிந்து பரந்த வான்!






உமையாள்
புரொடக்ஷன்ஸ்
அளிக்கும்

கலைஞர் கருணாநிதியின்

# அவன் பித்தனா?

டைரக்ஷன் · ப. நீலகண்டன்

சென்னை **பாரகன் · மஹாராஜா**
**ராக்ஸி · நூர்ஜஹான்**
மற்றும் தென்னாடெங்கும்

ELEGANT

தயாரிப்பு S.P. கருப்பையா P. அங்கமுத்து · R. பெரியநாயகம்

நீங்கள்
பொலிவுடனிருக்க
சார்மிஸ்
உபயோகியுங்கள்!




## புதுமை பெறுக... இதம் பெறுக...
## நாள் முழுவதும் நளினமாய் இருங்கள் !

நாள் முழுவதும் நளினமாய் இருக்க, புதிய சார்மிஸ் உபயோகித்து குளுமையையும், புத்துணர்ச்சியையும் பெறுங்கள். பளபளப்பான, புதிய டின்னில் உள்ள சார்மிஸ், வியக்கத்தக்க வகையில் உங்களுக்குப் புத்துணர்ச்சியளித்து உங்கள் அழகைச் சோபிக்கச் செய்யும் அந்த உன்னத மனோரம்மிய நறுமணத்தைக் கொடுக்கிறது.

# சார்மிஸ்

உன்னத மனோரம்மிய மணத்துடன் கூடிய
டால்கம் பவுடர்

செல்ல வேண்டிய பாதை இதுதான் என்று வகுத்துத் தர முற்பட்டால் இயற்கை நியதிகளை மீறுவதாகும். அதனால் உண்மை முன்னேற்றத்துக்கான மக்களின் சுயசக்திகள் செயலற்று ஸ்தம்பிக்கவே செய்யும். 'லிபரலிஸம்' என்ற கொள்கைக்கு இந்தத் தத்துவம்தான் மையமாகும். மக்களுடைய முன்னேற்றம் முழு சுதந்திர நிலையில் சுய வேகத்தில் மட்டும் ஏற்பட வேண்டும்.

**6. பிரஜைகளின் சுய இச்சைச் செயல்கள்:**

தேசாபிமானம் மிகுந்த ஒவ்வொரு பிரஜையும் சமூகத்தை முன்னேற்றப் பாதையில் ஊக்குவிப்பதற்காக உறங்கிக் கிடக்கும் சக்திகளைத் தட்டியெழுப்பிச் செயலுக்குத் திருப்புவதைத் தனது முதல் கடமையாகக் கொள்வான். அவன் சமூகத்தில் சீர்திருத்தம் அல்லது முன்னேற்றம் தேவையென்று கண்டாலும் அதை அரசினின் கவனத்துக்கு எடுத்துச் சென்று சட்ட ரீதியில் நிறைவேற்றுவதைவிட சமூகத்தின் மனமாற்றத்தாலேயே அந்தச் சீர்திருத்தத்தைக் கொணர்ந்து அரசாங்கத் தலையீட்டுக்கு அவசியமில்லாமலே செய்துவிட முயலுவான். இதற்காகப் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டுவான்; உருவாக்குவான். அரசாங்க நடவடிக்கை அவசியம் என்று தோன்றும்போது அதற்கு மக்களை உற்சாகப்படுத்தி, அரசாங்கத்தை அணுகும்படியும் அவன் செய்வான். அதாவது தங்கள் சக்தியை அரசாங்கத்தின் மீது பிரயோகிக்க மக்களுக்குக் கற்றுத் தரும் பணியில் அவன் சதா ஈடுபட்டிருக்கிறான்.

லிபரல் கொள்கை இதுவே. தேவைப்படும் முன்னேற்றத்துக்குச் சமூக சக்தியைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமே தவிர, அரசாங்க நிர்ப்பந்தத்தினால் அதைச் சாதிக்க முயலக் கூடாது. அதாவது அதிக அளவு சுதந்திரம் பிரஜைகளுக்கு: குறைந்த அளவு அரசாங்கத் தலையீடு: அந்தக் குறைந்த அளவும்கூடப் பிரஜைகளின் இடைவிடாத கண்காணிப்புக்கும் கட்டுப்பாட்டுக்கும் உட்பட்டிருக்க வேண்டும்.

பொது சேவை விஷயத்தில் இந்த அம்சங்கள்தான் கோகலேயின் சித்தாந்தத்தில் முக்கியமானவை. அவர் காலத்தில் இவை எல்லாம் எவ்வளவு முக்கியமானவையாக இருந்தனவோ அதே அளவுக்கு நமது காலத்திலும் முக்கியமானவையே.

கருத்துச் சுதந்திரம், மனச்சாட்சிக்கு மாறுபடாத நடவடிக்கை — இவ்விரண்டுக்கும் முதலிடம் அளித்தார் கோகலே. நம்முடைய பிரச்னைகளுக்குக் கோகலே ஏதாவது பரிகாரம் சொல்லியிருக்கிறாரா என்று அவருடைய பேச்சுக்களை ஆராய்வது கோகலேயை அவமதிப்பதாகும் என்றும் த்வனித்துக் கொண்டிருக்கும் அவருடைய ஆத்மா நமக்குக் கூறும் புத்திமதி: ''உங்களுடைய பிரச்னைகளுக்குகந்த பரிகாரங்களை உங்கள் புத்தியையும், நல்லறிவையும் கொண்டு சுயேச்சையாகவே ஆலோசித்து, செயல்படுங்கள்'' என்பதே.

அரசியலுக்கு இரண்டு கோணங்கள் உண்டு. ஒன்று எல்லாக் காலத்துக்கும் பொருந்துவது: மற்றொன்று அந்தந்தக் காலத்துக்கு மட்டுமே பொருந்துவது — மனிதன் விஷயத்திலும் அப்படித்தானே. தரும ரீதியில் சில நிரந்தரமான தத்துவங்கள் ஆன்மாவைப் போல் ஸ்திரமானவை. தோற்றங்களும் செய்முறைகளும், சந்தர்ப்பங்களுக்கும் சூழ்நிலைகளுக்கும் தகுந்தவாறு மாறிக் கொண்டு செயல்படும் அங்க அவயவங்கள் போன்றவை. கோகலேயின் வாழ்க்கையும், கொள்கைகளும் அரசியலிலும் பொது சேவையிலும் நிரந்தரமான தத்துவங்களை விளக்கி வைக்கின்றன.

சுதந்திரத்துக்குப் பின் உலக அரங்கில் இந்தியாவின் அந்தஸ்து உயர்ந்து விட்டது. சுதந்திரம் பெற்றதன் காரணமாகவே இங்கு வேற்று நாட்டின் நலனை யொட்டிய நோக்கங்களெல்லாம் அரசினின் பொதுக் கொள்கைகளிலிருந்து வெளியேற்றப்பட்டன. எனினும் மக்களிடம் அதிகாரத்திலுள்ளோர் நடந்து கொள்ளும் விதம், மனப்பான்மை இவை மாறவில்லை. அதேபோல் மக்களிடையேயும் பிரஜா உரிமைகள் பெற்றுள்ளோம் என்பதால் அவற்றை நிலைநாட்டிக்கொள்ள உருவாக வேண்டிய புது விழிப்பு,புத்துணர்ச்சி இவை உண்டாகவில்லை. சுதந்திரத்துக்குப் பின் இம்மாறுதல்களை எதிர்பார்த்து ஏமாந்தோம். நாம் எதிர்பார்த்ததற்கு நேர்மாறாகச் சென்ற இருபது ஆண்டுகள், பொதுநலனைக் கவனிக்கும் ஆட்சியாளர்களிடையே எந்த அளவுக்கு நாணயமும், நன்னடத்தையும் நலிந்து தேய்ந்து விட்டன என்பதைத்தான் வெளிக் கொணர்ந்து காட்டியிருக்கின்றன.

ஒரு லட்சியக் குடியரசுக்கு இன்றியமையாததெனை ஓர் அரசியல் சந்நியாசியைப் பற்றி விரிவாகக் கூறினார் அறிஞர் பிளேட்டோ. அத்தகைய அரசியல் சந்நியாசிகளின் நவீன கால உருவமாகத் திகழ்ந்தார் கோகலே.

அவர் ஸ்தாபித்த ''இந்திய ஊழியர் சங்கம்'' இத்தகைய அரசியல் சந்நியாசிகளுக்கு ஒரு மதம் என விளங்கிற்று. தேச சேவைக்கே தங்களை அர்ப்பணம் செய்து கொண்டவர்கள் இம்மதத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரும். எல்லாவற்றையும் அறவே துறந்து, சமூகத்தின் பொதுநலன்களுக்கு மட்டும் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட சிலபேர்களாவது நூற்றுக்கு ஒருவராவது — இருந்தாலொழிய அரசியல் ஒருசில மனிதர்களின் சுயநலத்துக்கும், அதிகார வேட்டைக்கும்தான் இலக்காகும். ''அரசியலை ஆன்மிகப்படுத்து'' என்று கோகலே, காந்திஜி இருவருமே சொன்னார்கள். ஆனால் அந்தப் புனிதப் பணியை நிறைவேற்றி வைக்க, பிரஜா உரிமை பெற்றோரின் கடமைகளையே ஒரு மதமாக நிறுவிப் பின்பற்றும் மதச் சார்பற்ற இளம் சந்நியாசிகள் முன்வர வேண்டும். அவ்விதம் முன்வருவார்கள் என்று தேசம் எதிர்பார்த்துக் காத்திருக்கிறது. நம் நாட்டின் இன்றைய நிலைமையில் இதுதான் முக்கிய தேவை. ஒரே ஒரு நல்ல போலீஸ்காரன் விழிப்புடன் இருப்பதாலேயே, தூங்கிக் கொண்டிருக்கும் தெரு முழுவதும் திருடர்கள் புகாமல் பாதுகாக்கப்படுகிறதல்லவா?

சிக்கனமானது ● மற்ற எரிபொருள்களைவிட அதிக அனலை ஈந்து நீண்டநேர வெப்பத்தை கொடுக்கிறது ● புகையாதது ● எந்தரக அடுப்பினிலும் உபயோகப்படுத்தவல்லது.



சிறிய 'லீக்கோ' துண்டுகளை எடுத்துக் கொள்ளவும்.



பிறகு மெல்லிய அடுக்காக அடுப்பினில் பரப்பி வைக்கவும்.



வழக்கமான முறையில் எரிய வைக்கவும்.



சில நிமிடங்கள் கழித்து நன்றாக சுடர் விட்டவுடன் மேலும் வேண்டிய அளவு 'லீக்கோ' சேர்த்துக் கொள்ளவும்.






# 'லீக்கோ'
## நவீன வீட்டு எரி பொருள்

**நெய்வேலி லிக்னைட் கார்ப்பொரேஷன் லிமிடெட்,**
**நெய்வேலி-1**

FOS NLC 641 TMA

# யாத்திரை

## ஏ.எஸ். ராகவன்





## 13

சற்றும் எதிர்பாராத இடத்தில், எதிர்பாராத சூழ்நிலையில் கமலாவைக் காண நேர்ந்ததும் நாணுவுக்குப் பேச்சே எழவில்லை: அவளையே இமைக்காது பார்த்தான். நான்கு ஆண்டுகளுக்குள் அவள் நாலாயிரம் சாதனைகளை முடித்தவள் போலப் புதுமையும் அழகும், பருவமும் பூரிப்பும், நிதானமும் சாகசமும் பூண்டிருந்தாள். இது பருவம் புரியும் ரசவாதம் போலும்!

''என்ன அப்படிப் பார்க்கிறாய், நாணு?'' கமலா சிரித்தபடியே கேட்டாள்.

அவனும் சிரித்தான். ''முன்பெல்லாம் என்னைப் பார்த்துப் பொறாமைப் படுவாயே, கமலா! இப்போது நான் உன்னைப் பார்த்துப் பொறாமைப் படுகிறேன்'' என்றான்.

''என்னைப் பார்த்தா? ஏன்?''

''நீ எப்படி அழகாக வளர்ந்து விட்டாய்?''

''நீ மட்டும் என்னவாம்?''

''ஆணின் அழகு எதிலே சேர்த்தி?... பெண்மைக்குத்தான் அழகு சொந்தம். ஆணுக்கு வலிமைதான் அழகு.''

''நீ நன்றாகப் பேசத் தெரிந்து கொண்டிருக்கிறாய் நாணு...'' கன்னக் குழியில் சிரிப்பு வட்டமிட்டது. அது உடனே மறைந்தது. கமலா கேட்டாள். ''உன்னை அடித்தானே, அவன் யார்...?''

''ஒரு தொழிலாளி....''

''நீதான் தொழிற் சங்கத் தலைவனாக இருக்கிறாயாமே! உன்னை ஏன் அவன் அடிக்க வேண்டும் ?''

''தலைவனாக இருப்பதற்காக...... அது சரி. நான் தலைவனாக இருப்பது உனக்கு எப்படித் தெரியும்?''

''லட்சுமி அத்தை சொன்னாள்.... நீ அவர்கள் வீட்டில்தான் இருக்கிறாயாமே?''




"ஆமாம்!"

"ஊருக்கு நீ ஏன் தகவலை அனுப்பவில்லை? உன் மீது எனக்குக் கோபம்தான் வருகிறது. நாங்களெல்லாம் வேண்டாதவர்கள் ஆகி விட்டோமோ? சொல்லாமல் கொள்ளாமல் ஓடி வந்தாயே, இப்படித்தான் வருவதா?"

"நான் வந்ததால் உனக்குச் சங்கடம் குறைந்தது இல்லையா, கமலா?.... உன் அன்புக்குப் போட்டியாக இல்லாமல் நான் வந்து விட்டேன்." பழைய நினைவைக் கீறி நாணு பேசினான்.

அதைக் கேட்டுக் கமலா தலை குனிந்தாள். கோபம் மறைந்து வெட்கமும் வேதனையும் பாரமாக அழுத்தின. தன் மனத்திரையைக் கிழித்து அவன் பேசி விட்டானே என்றிருந்தது அவளுக்கு. "என்னை மன்னிச்சுடு, நாணு..... அப்பாவின் பிரியத்தில் உனக்கும் பங்கு இருந்ததை நான் விரும்பத்தான் இல்லை...... நீ அங்கிருந்து போனதும் நான் முதலில் சந்தோஷப்பட்டேன். ரொம்பப் பொறுமை பிடித்தவள் நான். ஆனால் நீ போனதும் அப்பா மாறிப் போய் விட்டார். உன்னை அவர் தேடவே யில்லை. எனக்கு ஆச்சரியமாகக்கூட இருந்தது. உயிராக இருந்தீர்களே, தேடக்கூட ஆள் அனுப்பாமல் இருக்கலாமா என்று அவரையே கேட்டேன். அவர் என்ன பதில் சொன்னார், தெரியுமா?"

நாணு கதை கேட்பவன் போல அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பார்வை அவளை மேலும் தலை குனிய வைத்தது.

"நீ உன் உலகத்தைத் தேடிப் புறப்பட்டு விட்டாயாம். உன்னைத் தேடிக் கண்டு பிடித்தாலும் நீ வேலூர் வர மாட்டாயாம். அவர் சொன்னார்."

"ஆமாம். நான் வந்திருக்க மாட்டேன், கமலா. அத்தான் சொன்னது முற்றிலும் சரி."

"நான் ஒன்று கேட்கிறேன் நாணு. பதில் சொல்வாயா?"

"கேளேன்."

"நீ ஏன் ஓடி வந்தாய்?"

## உங்கள் அழகுக்கு புதுப் பொலிவை அளியுங்கள்!

## பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்தால் முகம் சோபையுடன் வழவழப்பாகத் தோற்றமளிக்கும்

உங்கள் முகத்திற்கு வசீகரிக்கும் பொலிவை அளியுங்கள். நல்ல அழகியாகத் தோற்றமளிக்க விரும்பும் எந்தப் பெண்மணியும் முதலில் செய்ய வேண்டியது அதுதான். எண்ணெய்ப் பசையில்லாத செளம்யமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்தால் உங்கள் சருமத்திற்கு மிருதுத் தன்மையும் பாதுகாப்பும் கிடைக்கும். அது சருமத்திலுள்ள பெரிய துவாரங்களை மூடி முகத்தில் 'எண்ணெய் வடியும் தோற்றம்' உண்டாகாமல் தடுக்கிறது... முகத்தில் கருப்புப் புள்ளிகள் உண்டாவதிலிருந்து பாதுகாப்பளிக்கிறது. பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தனியாக உபயோகித்தால் உங்கள் வதனம் இயற்கைப் பொலிவுடன் விளங்கும். இந்தக் க்ரீமைத் தடவி அதன்மீது பவுடர் போட்டுக்கொண்டால் பவுடர் ஒரேசீராகப் படிந்து மணிக்கணக்கில் கலையாமல் இருக்கும்.




**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்து**
**உங்கள் அழகுக்கு மெருகூட்டுங்கள்**

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. யில் இணைக்கப்பட்டது)

JWT-A-7117

இந்தக் கேள்வியை நாணு எதிர்பார்க்கவில்லை. இதற்குப் பதில் சொல்வது கடினம். சில உணர்ச்சிகளை மறைத்துச் சிலவற்றை வெறுத்து அவன் வெளியேறினான். அந்த உணர்ச்சிகளை அவன் புரிந்து கொள்கிற அளவுக்கு மற்றவர்கள் புரிந்துகொள்ள முடியாது. அதுவும் கமலாவால் கட்டோடு முடியாது.

''சொல், நாணு....''

''உன்னிடம் மறைக்காமல் சொல்ல ஆசைதான், கமலா! ஆனால் அதைக் கேட்பதால் உன் மனசில் பெரிய வடு தோன்றி விடும். ஆகவேதான்.....''

கமலா! முகத்தைக் கவிழ்த்துக் கொண்டாள். ''வேண்டாம், நாணு. நீ சொல்ல வேண்டாம். நீ அங்கே இருந்தபோது உன்னை அநாதை என்றேன். என் அறைக்குள் நீ வந்தால் சிடுசிடுத்தேன். அப்பாவின் அன்பைக் கண்டு பொறாமைப்பட்டேன். அதையெல்லாம் இப்போது நினைத்தால் சிறுபிள்ளைத்தனமாகத் தோன்றுகிறது....

''பார்த்தாயா, பார்த்தாயா! பேச்சில் மறந்தே போய் விட்டேன்! மருந்து தரும் நேரமாகி விட்டது. மணி ஐந்து அடிக்கப் போகிறது!'' என்று எழுந்தாள் கமலா.

''நீ எப்போது நர்ஸ் ஆனாய்?''

''உன் தலையில் அடிபட்டதிலிருந்து....''

''கமலா, உன்னை இங்கே பார்ப்பேன் என்று நினைக்கவே இல்லை. நீ வேலூரிலிருந்து இங்கே எப்படி வந்தாய்?''

''நல்ல வேளை, இப்போதாவது விசாரித்தாயே ?''

''எனக்கும் மூளை குழம்பி விட்டது, கமலா. உன்னைப் பார்த்த பிரமை இன்னும் தீரவில்லை !''

''கேலி செய்யாதே, நாணு!''

கமலா முகத்தை நிமிர்த்தி மருந்தை வாயில் ஊற்றினாள்.

''பலே.... பலே.... பார்த்துக் கொண்டாயா, லட்சுமி?.... உன் குழந்தையை யார் கவனிப்பார்கள், அவன் தனியாகக் கிடப்பானே என்று தவித்தாயே, கமலா நர்ஸ் வேலை பார்க்கிறாள் இங்கே'' என்றபடியே விசுவநாதன் நுழைந்தார்.

லட்சுமி அம்மாள் முகமெல்லாம் மலர, ''கடவுள்தான் உன்னை இங்கே கொண்டு வந்து சேர்த்தார், குழந்தை..... டாக்டர் சாரநாதனின் பார்வை பட்டாலே நோய் பறந்து விடும்'' என்றாள்.

''ஏன்? கமலாவின் கைபட்டால் நோய் பறக்காதோ?'' என்றார் விசுவநாதன்.

லட்சுமி அம்மாள் சிரித்தபடியே, ''உங்களுக்கு எல்லாமே இடக்குத்தான்'' என்றாள். பிறகு தணிந்த குரலில், ''இவள் கைபட்டால் குழந்தைக்கு நோய் வந்து விடும்..... காதல் நோய்!'' என்றாள்.

விசுவநாதன் உரக்கச் சிரித்தார். ''அடியே, நீ திரிகால ஞானி! ரேகை சாஸ்திரம், பட்சி சாஸ்திரம், நாடி பார்க்கிறது மாதிரி நீயும் ஒரு வித்தையைக் கற்றுக் கொண்டுதான் இருக்கிறாய். அதை அப்புறம் கவனிப்போம். முதலில் தலையில் அடிபட்டுக் கிடக்கிற குழந்தையைக் கவனி!'' என்றார்.

லட்சுமி அம்மாள் நாணுவின் அருகில் வந்தாள்.

அந்தக் குழந்தை சிரித்தது. ஆனால் சிரித்த போது நரம்புகளின் வீக்கத்தில் தலைப் பகுதியில் ஊசி குத்துவதுபோல் வலியெடுக்கவே, 'அம்மா!' என்று முனகிற்று.

''இதோ வந்து விட்டேன்டா, குழந்தை. மருந்து சாப்பிட்டாயா?''

''நீ வந்த பிறகு மருந்து எதற்கம்மா?''

''அசடு!.... அசடு! மருந்தும் வேணும், அம்மாவும் வேணும்'' என்றார் விசுவநாதன், குறிப்புணர்த்தும் பாவனையில்.

''நீங்கள் அம்மா இருக்க மாட்டீர்களா?''

''மாட்டேன்.... டாக்டர் சாரநாதனின் மருந்துக்குப் பெருமை இல்லை.... வேலூரிலிருந்து காலேஜுக்குப் படிக்க வந்திருக்கிற இந்தப் பொண்ணு, இவன் அடிபட்டுவிட்டானே என்று லீவ் போட்டுக் கொண்டு, கவனிக்கிற கவனிப்புக்கும் பெருமை இல்லை. அம்மா வந்தால் எல்லாம் சரியாகப் போய் விடும் என்கிறாயே!''

''அட ராமா! உங்கள் விளையாட்டுக்கு நேரம், வேளை இல்லையா?''

''நேரம், வேளை எல்லாம் நாமாக வைத்துக் கொண்ட கணக்குத்தானேமா?....சூரியன் வேளை பார்த்தா வரான்? அவன் வர வேளையிலே வெளிச்சம் வரது. அதனாலே பொழுது விடியறது.''

''வர வர வேதாந்தம் அதிகமாகிவிட்டது. காஷாயம் கட்ட வேண்டியதுதான் பாக்கி.''

''பொறுப்பெல்லாம் கழிந்து விட்டால் காஷாயம் தன்னாலே வருகிறது. இப்போது மட்டும் என்ன? இல்லறத்தில் துறவறம் தானே... ?''

''ராமா! நான் டாக்டரைப் பார்த்து விட்டு வருகிறேன். வாம்மா, கமலா. குழந்தை, இரு வரேன்.''

''இருக்காமல் அவன் எங்கே ஓடிவிடுவான்? எங்கே, ஓடச் சொல். ஓடுகிறானா, பார்ப்போம்!'' கமலாவைக் குறும்பாகப் பார்த்தவாறே லட்சுமி அம்மாளிடம் ஊடல் மொழி பேசினார் விசுவநாதன்.

நாணு முகத்தைத் திருப்பிக் கொண்டான். அவருடைய கேலி அவன் நெஞ்சில் குறுகுறுத்தது.

நாணு அந்த மனையில் ஒரு வாரம் தங்க வேண்டியிருந்தது. ஒரு நாள் அவனைக் காண நாயர் வந்தார். ''குப்புசாமியைப் போலீசில் பிடித்து விட்டார்கள்'' என்றார்.

''அப்படியா? நான் ஏதும் புகார் தரவில்லையே?'' என்றான் நாணு.

''முதலாளியே கொடுத்து விட்டார் உங்களுக்காக !''

''கவுன்சிலில் குப்புசாமிக்கு மீண்டும் வேலை தராவிட்டால் போராட்டத் தீர்மானம் நிறைவேறியிருக்கிறதே!''

''அதற்கு என்ன செய்வது? குப்புசாமி தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொண்டு விட்டான்.''

''என்ன இது, நாயர்? அவனுக்காக நாம் எடுத்த முடிவு கைவிடப்படலாமா?''

"என்ன செய்வது? குப்புசாமிக்கு இரக்கம் காட்டக் கூடாது. நாராயண். உங்களிடம் ரகசியமாகச் சொல்கிறேன். அவன் மீது வழக்குத் தொடுக்க எத்தனை செலவானா லும் முதலாளி தருவார். நம் சங்கத்துக்கு மூவாயிரம் ரூபாய் அன்பளிப்புத் தருவதாக வும் முதலாளி உறுதி சொன்னார்."

நாணு சிரித்தான்.

"அவன் உங்களைத் தாக்கியதற்கு உரிய தண்டனை பெற்றே தீருவான். இது தெய்வ சங்கல்பம்."

நாணு மீண்டும் சிரித்தான்.

"ஏன், சிரிக்கிறீர்கள் நாராயண்?"

"மிஸ்டர் நாயர்! குப்புசாமிக்குத் தண்டனை கிடைக்காமற் போனால் என்ன செய்வீர்கள்?"

"என்னது? மிஸ்டர் நாராயண், என்ன சொல்கிறீர்கள்?"

"அவன் என்னைத் தாக்கவில்லை நாயர், மிரட்டினான். அது உண்மை. தாக்கியது குப்புசாமி அல்ல. வேறு யாரோ ஒருவன் அல்லவா?"

நாயர் அப்போது சிரித்தார்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?"

"நாராயண்.... அவனுக்கு இரக்கம் காட்டாதீர்கள்."

"முன்பு நீங்கள் காட்டினீர்களே?"

"அது வேறு. இது வேறு. அது தொழிற் சங்கத்தின் வளர்ச்சிக்குத் தேவையாக இருந் தது. இது தலைமைப் பீடத்துக்குப் பங்கம் பண்ணத் துணிகிற காரியம். இன்றைக்கு நீங்கள் அடிபட்டீர்கள். நாளைக்கு நான் படலாம். அடுத்த நாள் இன்னொருவர் என்று ஆகி விடும். இதை வளர விடக் கூடாது."

"அப்படியல்ல, மிஸ்டர் நாயர். குப்பு சாமி நல்லவன் என்று நான் சொல்லவில்லை. சில பேர் சுபாவமாகவே தீய குணங்க ளோடு வளர்வதில்லையா? அவர்களைத் திருத்துவது கூடத் தலைமைப் பீடத்தின் காரி யம் அல்லவா?"

நாயர் எழுந்தார். "நான் வருகிறேன்" என்று கூறிப் போய் விட்டார்.

அவனுக்கே வியப்பாக இருந்தது. குப்பு சாமி தன்னைத் தாக்கவில்லை என்று நாயரிடம் எப்படிச் சொன்னான்! எந்தச் சக்தி அப்படிச் சொல்ல வைத்தது!

லட்சுமி அம்மாள் நுழைந்தாள்.

அவள் தந்த சக்திதானோ?

"குழந்தை, எப்படி இருக்கிறது உடம்பு?"

"உடம்பு குணம் தானம்மா.... மனசு தான் சரியாக இல்லை."

"அடேடே, அது ரொம்பப் பொல்லாத தாயிற்றே!" என்றவாறே நுழைந்தார் விசுவநாதன்.

"என்னடா, குழந்தை, உன் மனசுக்கு என்ன?"

"அவனைக் கேட்கணுமா? இது தெரிய வில்லையாமா?"

"எனக்கு எதுவும் தெரியவில்லை போங்கள்."

நாணு அவரைப் பார்த்தான். "நாயர் வந்திருந்தார். சற்று முன்னால்தான் போனார்" என்றான்.

அவன் மனசு சரியாக இல்லாததற்கு அதுவே காரணம் என்பதை அவருக்கு விளக்கிச் சொல்ல வேண்டியதில்லையே!

விசுவநாதன் சிரித்தார். "போய்விட்டா னல்லவா! அவனுடைய தொழிற்சங்கத் தலைமை எப்படிப்பட்டது என்பதை நான் நாடி பிடித்துப் பார்த்து விட்டேன்! மூவா யிரம் ரூபாய் தருவதாகச் சொன்னதும் ஆள் கவிழ்ந்தே விட்டான்."

"மாமா, நான் உங்களைச் சந்தேகித்து விட்டேன். தயவுசெய்து மன்னியுங்கள்."

"அதெப்படி மன்னிப்பது?.... முதலில் வழக்கு நடக்கட்டும். பிறகே மன்னிப்போம்."

"இப்போது கிடைக்காதா?"

"ஊஹூம்.... நீ கரடியாய்க் கத்தினாலும் கிடைக்காது இப்போது.... அவனவனுக்கும் மனசில் உறைக்க வேண்டாமோ? மன்னிப்புத் தந்தால் அப்புறம் துளிர்த்துப் போகாதோ?"

நாணுவுக்கு ஒன்றும் பேச்சு விளங்கவில்லை.

"பயப்பட்டு விட்டாயா? உனக்கு எதற்கு மன்னிப்பு? அந்தக் குப்புசாமிக்கல்லவா சொல்கிறேன்!"

"அவனுக்கு மன்னிப்பா? என்ன இது? உங்களையே ஒரு முறை கொல்ல முயன்றான். இப்போது நான்!....."

"அடுத்த தடவை அவன் யாரைக் கொலை செய்வானோ என்ற திகைப்பு உனக்கு?"

"ஆமாம்."

"அவனை மன்னித்தால் நிச்சயம் கொலை நடக்கும்..... அதைத் தவிர்க்க முடியாது. ஆனால் அந்தக் கொலை எங்கே நடக்கும், தெரியுமா?"

நாணு வியப்புடன் அவரையே பார்த்தான். இவர் என்ன மாயாவியா? குப்புசாமி விடுதலை பெற்றால் யாரை எங்கே கொலை செய்வான் என்பதைக்கூட இப்போதே சொல்கிறாரே!

"அந்தக் கொலை அவன் மனசில் நடக்கும் நாராயண். ஆமாம்.... அவனுடைய கெட்ட புத்தி, கேவலமான போக்கு எல்லாமே மாறிப் போகும். முன்பு அவன் என்னைக் கொலை செய்ய முயன்றது அறியாமையால். உன்னைத் தாக்கியது ஆத்திரத்தால். இந்த இரண்டுக்கும் அவன் இப்போது ரிமாண்டில் கண்ணீர் விடுகிறான். குப்புசாமியும் மனிதன் தானே, நாராயண்.... அவனுக்கும் சில உணர்ச்சிகள் உண்டல்லவா? அவனுடைய போக்கு செம்மைப்பட இந்த வேதனை அவனுக்குத் தேவை......"

நாணுவின் கண்களில் நீர் தேங்கிற்று. இப்படிச் சிந்திக்கவும் பேசவும் யாரால் ஆகும்? அந்த நிழலுக்கு வந்த பிறகு அவனும் அல்லவா பண்பட்டுப் போனான்! விஷத்தை எடுத்து வந்த பழைய வெறி எங்கே போயிற்று? அத்தையைக் கொலை செய்யத் துடித்த ஆவேசம் எங்கே போயிற்று? தெருவுடன் காவேரிக் கரையில் தீய பழக்கத்தில் நாட்டம் செலுத்திய சபலம் எங்கே போயிற்று? பெற்றோரைப் பற்றிய செய்திகள் வேலூரில் பலருக்குத் தெரிந்திருந்ததை விரும்பாத மனம் எங்கே போயிற்று?

"நான் ரொம்ப உயர்ந்த மனிதன்! அப்படித்தானே நினைக்கிறாய்? போடா, முட்டாள்..... உலகத்தில் அன்பு ஒன்றுதான் சாசுவதம். அன்புடையார் இன்புற்று வாழ்தல் இயல்பு" என்றார் விசுவநாதன்.

கமலா ஒரு நாள் சீதாவுடன் வந்து நின்றாள். "இவளைத் தெரிகிறதா?" என்று நாணுவிடம் கேட்டாள்.

"தெரியாமலென்ன? சீதா தானே?" எடுத்த எடுப்பிலேயே அடையாளம் கண்டு கொண்டான் நாணு.

"நீயும் இங்கே காலேஜில் படிக்கிறாயா, சீதா?" என்று கேட்டான்.

"ஆமாம்."

"அம்மா சந்தோஷப்படுவாள். நீயும் கமலாவும் ஒரு நாள் எங்கள் வீட்டுக்கு வரலா மில்லையா?"

"வரலாமே... என்ன, கமலா?"

"கட்டாயம்."

லட்சுமி அம்மாளும் விசுவநாதனும் கமலாவை முதன் முதல் கண்டதிலிருந்து அவளை நாணுவுடன் இணைத்துப் பார்த்து, இந்தச் சம்பந்தம் வாய்த்தே விட்டதுபோல் மனத்துள் மகிழ்ந்து கொண்டிருந்தனர்.

நாணுவுக்கு இன்னதென்று சொல்லத் தெரியாமற் போனாலும் கமலாவைச் சந்தித்ததிலிருந்து உள்ளூற ஒரு வியப்பு பரபரத்தது. அவளுடைய பெண்மையின் கவர்ச்சியும், மயக்கமும் வெளிப்படையாகவே அவனைத் தாக்கின. மருத்துவ மனையில் அவனை எத்தனை பரிவோடும் கவனத்தோடும் அவள் பேணினாள்? அவளுடைய பழைய உதாசீனமும் பொறுமையும் எங்கே போயின? மருத்துவ மனையிலிருந்து வீடு வந்தவனுக்கு ஒரே நினைவு; கமலாவின் நினைவு.

விடிந்ததும் விடியாததுமாகக் கமலா வந்து விட்டாள். அவ்வளவு அதிகாலையில் இவ்



பையன்: (படித்தவன்) ஷைலக் ஒரு பவுண்ட் சதை கேட்டான்! 'ஒரு பவுண்ட் சதை அறுத்துக் கொடு!...' என்றான்.

வளவு ஒப்பனைக்கு அவளுக்கு எங்கே நேரம் கிடைத்ததோ? தாழம்பூ வைத்த பின்னலுடன், ஊதா வர்ணப் புடவையும், நீல ரவிக்கையும், பச்சைக் கல் பதித்த அட்டிகையும், வெட்டும் வெள்ளையுமாக வளையல்களும் பூண்டு காட்சி தந்தாள், வடிவே ஓர் அழகாக!

"வாடியம்மா.. மகா லட்சுமி மாதிரி இருக்கே! குழந்தை, கமலா வந்திருக்கிறாள்" என்று பரபரத்தாள் லட்சுமி அம்மாள்.

"இன்றைக்குக் கல்லூரி விடுமுறையா, கமலா?" என்று கேட்டான் நாணு.

"கேள்வியைப் பார். விடுமுறை இருந்தால்தான் வரவேண்டுமோ?" என்றார் விசுவநாதன், பொய்க் கோபம் காட்டி.

கமலா நாணிக்கொண்டே உள்ளே ஓடினாள்.

"ஒரு பெரிய கவலை வந்துவிட்டது எனக்கு. இது தீரவேண்டும்" என்றார் விசுவநாதன்.

"என்ன கவலை மாமா?"

"உன் கவலைதான்... வேறென்ன?"

"என்னைப் பற்றிக் கவலை வேண்டாம்... நான் இதோ புறப்பட்டுப் போகிறேன்."

"எங்கே?"

"குப்புசாமியின் வழக்கைப் பற்றி வக்கீலிடம் கலந்து பேச."

—— வேடிக்கைக் கணக்கு—விடை ——

$$\begin{array}{r} 1234 \\ -\ \ 10 \\ \hline 12\not{2}4 \end{array} \rightarrow 1+2+3+4$$

அடுத்த எண் 2. சொல்கிற எண் 124. அதாவது 124 என்று சொன்னவுடனேயே அடுத்த எண் 2 என்று சொல்லி விடலாம்!

**விளக்கம்:** மூல எண் 9 என்று வைத்துக் கொள்ள வேண்டும். கணக்குப் போட்டுச் சொல்கின்ற எண் 124 அல்லவா? அதை 1+2+4=7 இப்படிக் கூட்ட வேண்டும். (ஒரே எண்ணாக வரும் வரை கூட்ட வேண்டும்). பிறகு 9லிருந்து 7ஐக் கழித்தவுடன் 2 வருகிறதல்லவா? அதுதான் அடுத்த எண். எத்தனை இலக்கங்கள் வரை எழுதிச் செய்தாலும் மிகச் சரியாக வரும். எங்கே செய்து பாருங்கள், பார்ப்போம்!

"அதற்கு அவசியமில்லே. நானே எல்லாம் பேசி முடித்து விட்டேன்... இந்தா, பிடி. மரியாதையாக நான் சொல்லுகிற இடத்துக்குப் போய்விட்டு வா."

அவர் கொடுத்தவை இரண்டு சினிமா டிக்கட்டுகள். முதல் வகுப்புக்கு முதல் நாளே வாங்கிப் பதிவு செய்யப்பட்டிருந்த டிக்கட்டுகள்!

"கமலா தான் வாங்கச் சொன்னாள்" என்றார் விசுவநாதன் குறும்பாக.

"சீதாவும் வருவாள் என்று வாங்கச் சொல்லியிருப்பாள்... அவர்கள் இருவரும் நகமும் சதையும் போல."

"உன் உவமைக்கு ஸைபர் மார்க். நீ புத்திசாலியே இல்லே. அசடு. மக்கு. அரை லூஸ்!"

நாணு சிரித்தான்.

"சீதா வர மாட்டாள். இந்த ஜதாப் புடவைதான் வருவாள் உன்னோடு... 'மனிதரிலே மாணிக்கம்' படம் ஜனாதிபதி பரிசு வாங்கியிருக்கிறதாம். கண்ணை மூடிக் கொண்டு பார்த்துவிட்டு வா... போ."

"கண்ணை மூடிக்கொண்டா?"

"ஆமாம்... கண்டிப்பு... போ."

கமலாவும் அவருமாக வகுத்த அந்தத் திட்டத்தின்படி நாணு திரைப்படம் பார்க்கப் போனான் அவளோடு. வேலூரில் அவனும் சீதாவும் இப்படித்தான் ஒரு படம் பார்த்து விட்டுக் காதலைப் பற்றி விமரிசித்தார்கள். அந்த நினைவு வந்தது.

கமலா உற்சாகமாக இருந்தாள். ஒரு புதிய உணர்வு அவளை ஆட்கொண்டிருந்தாற் போலிருந்தது. நாணுவை நிமிர்ந்து பார்க்காமல் விழிக் கடைகளிலேயே கவனித்தாள். அடிக்கடி சிரித்துக் கொண்டாள். படபடவென்று பேசினாள். நாணு கண்ணை மூடிக் கொண்டுதான் படம் பார்த்தான். படத்தில் எதுவும் தெரியவில்லை. அருகில் இருந்த கமலாவே தெரிந்தாள். விம்முகின்ற அந்த உள்ளம் அவனை வாட்டியது. ஒரு வேதனை அவனைக் கவ்வியது.

"கமலா!"

"என்ன?"

"இப்படி நானும் நீயும் படம் பார்க்க வந்தது அதிசயமாக இல்லையா?"

"ஆமாம்."

"நான் யாரோ ஓர் அநாதை அல்லவா?"

"நாணு, தயவு செய்து அந்த வார்த்தையை மறக்க மாட்டாயா?"

"மறக்கத்தான் விரும்புகிறேன். ஆனால் அது என்னை எச்சரித்துக் கொண்டே யிருக்கிறது, கமலா...இதெல்லாம் கனவு போலிருக்கிறது."

அவள் பெருமூச்சு விட்டாள்.

"கமலா!"

அவன் குரல் தழுதழுத்தது.

"என்ன, நாணு?" அவள் முகம் சிவந்தது.

"எனக்கு ஏதோ நெஞ்சு தவிக்கிறது."

"ஏன்?"

"புரியவில்லே."

கமலா அவனையே பார்த்தாள். பிறகு தணிந்த குரலில், "எனக்கும்தான் தவிக்கிறது, நாணு... உன்னோடு பேசினால் அது இன்பமாகவும் இருக்கிறது. அதே சமயம் எனக்கே புரியாத வேதனையும் உண்டாகிறது" என்றாள்.

"அப்படியா?... எனக்கும் கூட உன்னோடு பேசுவதிலும் உட்கார்ந்திருப்பதிலும் பிரமையே உண்டாகிறது. இது ஏன் என்று உனக்குப் புரிகிறதா?"

"ஊஹூம்."

"எனக்கும் புரியவில்லே. சில அனுபவங்களைச் சேகரிக்கிற யாத்திரிகன் போல் இருக்கிறேன், கமலா... பெரியோருக்குச் சேகரிக்கிற அவலத்தை இல்லாமல் செலவழிக்கிற அறநெறியாக மனசு இருக்கிறதே. அப்படி எனக்கு ஏன் இல்லே என்று புரியவில்லே."

அவனுடைய பேச்சு அவளுக்கு மயக்கத்தைத்தான் தந்தது. "நாணு, உன்னிடம் நல்ல வளர்ச்சி வந்து விட்டது... உன் மனசு பண்பட்டு விட்டது. ஜெருக் தடியனோடு சேர்ந்து கெட்டுப் போகாமல் எப்படியோ தப்பித்துக் கொண்டாயே, கடவுள் செயல்தான் அது" என்றாள்.

"ஜெரு எங்கே இருக்கிறான் கமலா?"

"கல்கத்தாவில் இருந்தானாம். அப்புறம் பம்பாய் போனானாம். அங்கேயும் இப்போது இல்லே என்று தெரிகிறது. எங்கே போனானோ?"

"ஓர் இடத்தில் நிலையாக இருக்க மாட்டான் போலிருக்கிறதே!"

கமலா சிரித்தாள்.

படம் முடிந்து திரும்புவதற்குள் நாணு கமலாவை நன்கு புரிந்து கொண்டான். அவள் சொல்ல முடியாத் தன்னைப் புலப்படுத்திக் கொண்டாள். அவனுடைய அன்பு இப்போது நாணுவுக்குச் சுமையாகத் தோன்றியது. அவளை அவன் பார்க்காதவரை நிம்மதி இருந்ததே, இனி அது கிட்டுமா? (தொடரும்)

# வெற்றித் திருநகர்

## அகிலன்

### அத்தியாயம் பதினாறு

## வீரனும் கோழையும்

மாலைப் பொழுது மயங்கிக் கலங்கி இருளில் கரையத் தொடங்கிய பின்னரே, விசுவநாதனுக்கு நகரத்துக்குத் திரும்ப வேண்டுமென்ற நினைவு ஏற்பட்டது. தோணியை மெல்லத் திருப்பிக் கொண்டு, ஆற்றின் ஓட்டத்துக்கு எதிராகத் துடுப்பு வலிக்கத் தொடங்கினான். லட்சுமிக்கோ அன்றைய இரவுப் பொழுது முழுதும் அப்படியே அவனோடு ஒன்றாகத் தோணியில் மிதந்து, ஆற்றின் ஓட்டத்தோடு செல்ல வேண்டும் போலிருந்தது. என்றாலும் அவளுடைய தந்தையின் நினைவு ஒரு புறம், அவளுக்குள் அச்சத்தை எழுப்பிக் கொண்டிருந்ததால், அவள் விசுவநாதனைத் தடுக்கவில்லை.

"இன்று மட்டிலும் உங்களை நான் சந்திக்காமலிருந்தால் எனக்குச் சித்தப்பிரமை ஏற்பட்டிருக்கும். உங்களை வரவேற்று இந்த நகரம் முழுவதுமே விழாக் கொண்டாடும் போது நான்மட்டிலும் அதிலிருந்து தடுக்கப் பட்டுவிட்டேன். நான் அப்போது என்ன பாடுபட்டிருப்பேன் என்று உங்களுக்குத் தெரியாது" என்று குமுறினாள் லட்சுமி.

விசுவநாதனுக்கு அவளுடைய வேதனை நன்கு புரிந்தது. சாளுவ நரசிம்மர் தன்மீது கொடூரமான முறையில் வஞ்சம் தீர்த்துக் கொள்ள முனைந்து விட்டார் என்பதில் அவனுக்குச் சிறிதும் ஐயம் ஏற்படவில்லை. என்றாலும் லட்சுமிக்கு ஆறுதல் கூறி அவளைத் தேற்ற முயன்றான் அவன்.

"லட்சுமி! விழா, வரவேற்பு, ஊர்வலம் எல்லாவற்றையும் விட நாம் இப்போது இந்தத் தோணியில் தனித்திருக்கிறோமே, இதுதான் எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சியைத் தருகிறது. முற்பகலில் நீ தடுக்கப்பட்டதற்காக வருந்தாமல், இப்போது நாம் சந்திக்க முடிந்ததை நினைத்து மகிழ்ச்சி கொள். நான் எங்கிருந்தாலும், எது செய்தாலும் நீயும் என்னுடைய நெஞ்சிலேயே குடியிருக்கிறாய் என்பதை மறந்து விடாதே!"

லட்சுமிக்கும் அவன் கூறியது உண்மை என்றே தோன்றியது. முற்பகலில் அவள் துடித்த துடிப்பெல்லாம், பட்ட வேதனையெல்லாம் இப்போது அடியோடு மாறி விட்டன. நீண்ட நாட்களின் பிரிவுக்குப் பிறகு அவர்கள் மீண்டும் கூடியிருந்தார்கள். அதிலும், சாளுவ நரசிம்மர், குறுக்கே நெடுஞ்சுவர் போல் நிமிர்ந்து நின்ற பிறகும் அவர்கள் அதைத் தாண்டி வந்து சந்தித்துவிட்டார்கள். மறக்க முடியாத சந்திப்புத்தான் அது.

"மீண்டும் நாம் பிரிந்து செல்வதற்காகத் தான் இப்போது சந்தித்திருக்கிறோம். விரைவில் சக்கரவர்த்திகளிடம் கூறி நம் திருமணத்துக்கு நீங்கள் ஏற்பாடு செய்ய வேண்டும். இல்லாவிட்டால் நாம் என்றென்றும் பிரிக்கப்பட்டு விடுவோமோ என்று நான் அஞ்சுகிறேன்" என்றாள் லட்சுமி.

"நீ இப்படிக் கோழை போல் பேசுவது தான் எனக்குப் பிடிக்கவில்லை. அச்சமறியாது வளர்க்கப்பட்ட நீயே இப்படி அஞ்சுவதாய்க் கூறலாமா?"

லட்சுமிக்கு எப்படித் தன்னிடம் இந்த மாறுதல் ஏற்பட்டதென்றே தெரியவில்லை. விசுவநாதன் பாண்டிய நாட்டுக்குப் படையெடுத்துச் சென்றதிலிருந்து அவள் தன்



மன வலிமையைச் சிறிது சிறிதாக இழந்து வந்தாள். சாளுவ நரசிம்மரிடம் ஏனோ அவளுக்குப் பாசத்துக்கும் மேலாக அச்சமே வளர்ந்து கொண்டு வந்தது. இல்லாவிட்டால் முற்பகலில் அவர் தடுத்தபோதே, அவரிடம் விவாதம் செய்து வெற்றி பெற்றிருப்பாள். அவர் விருப்பத்துக்கும் மாறாக வரவேற்பில் கலந்துகொள்ளச் சென்றிருப்பாள். ஆனால் ஏனோ அவளுக்குத் துணிவேற்படவில்லை.

லட்சுமி குழம்பியிருந்ததைக் கண்டு, விசுவநாதனே தொடர்ந்து பேசினான்.

''பழி பாவங்களுக்குத்தான் அஞ்ச வேண்டுமே தவிர, பழியின்றி வாழ்வதற்கு ஒருபோதும் அஞ்சக் கூடாது. நெடுநாட்களாகவே மணம் முடித்து வைக்க வேண்டுமென்ற எண்ணம் உன் 'அப்பாவுக்கு இருந்தது. நாம் நெருங்கிப் பழகுவதையும் அவர்கள் தடுக்கவில்லை. இப்போது மட்டிலும் அவர்கள் வேறு விதமாக நினைக்கிறார்கள் என்றால், அதற்கு நீ அஞ்சக் கூடாது. சக்கரவர்த்தி



களின் ஆணைக்கு அஞ்சி உன் அப்பா உன்னை எனக்கு மணம் செய்து கொடுப்பதை விட, நம்முடைய எண்ணத்தின் துணிவினால், நாம் மணந்து கொண்டு வாழ்வதே நல்லது.''

லட்சுமிக்கு விசுவநாதனின் பேச்சு விசித்திரமாகத் தோன்றியது. ''நீங்கள் ஆண் பிள்ளை; வீரம் பேசுகிறீர்கள். என்னால் என் தந்தையிடம் எதுவுமே பேச முடியவில்லை'' என்றாள்.

''விஜயநகரத்துப் பெண்மணியும் வீரத்தில் குறைந்தவளல்ல; அதனால்தான் அவள் தன் தோழியை அனுப்பி என்னை இங்கே வரச் செய்திருக்கிறாள்!'' என்று கூறி, விசுவநாதன் பெருமையோடு புன்னகை பூத்தான். பல கடமைகள் அவனுக்கு அன்று இருந்தும் கூட, அவனால் லட்சுமியின் அழைப்பைத் தட்ட முடியவில்லை. அந்த விவரத்தையும் அவளிடம் கூறினான்:

நன்றாக இருள் கவியத் தொடங்கியது. லட்சுமியும் திடீரென்று தன் தந்தையை நினைத்துக் கொண்டாள். அந்த நினைவே அவள் தேகத்தை நடுங்கச் செய்தது.

''மாளிகைக்குத் திரும்பிய பிறகு எப்படித்தான் என் அப்பாவின் முகத்தில் விழிக்கப் போகிறேனென்றே தெரியவில்லை. அவர்கள் எப்படி நடந்து கொள்வார்களோ தெரியாது. அவர்களுடைய கட்டளையை மீறி நான் இங்கு வந்ததே இப்போது தவறென்று தோன்றுகிறது.''

சுரீரென்று விசுவநாதனின் நெஞ்சில் அப்போது வேல் பாய்ந்தது போல் இருந்தது. துடுப்பு வலித்த அவனுடைய கரங்கள் தடுமாறின. எதிர் வெள்ளத்தில் சென்றுகொண்டிருந்த தோணி தத்தளித்தது.

''லட்சுமி!'' என்று தன்னை மறந்த ஆத்திரத்தில் அவன் கத்தினான்.

லட்சுமி திடுக்கிட்டாள்.

''நீ இங்கு வந்தது தவறென்று தோன்றினால், என்னிடம் பணிப்பெண்ணை அனுப்பியிருக்கவே வேண்டாம். ஒரு செயலைச் செய்வதற்கு முன்பு நன்றாக ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்திருக்க வேண்டும். செய்த பிறகு அதற்காக வருந்தக் கூடாது!'' விசுவநாதனின் குரலில் சிறிது கடுமை கலந்திருந்தது.

''நீங்களே இப்படிக் கோபித்துக் கொண்டால் நான் என்ன செய்வேன்?'' என்று தாரை தாரையாய்க் கண்ணீர் வடித்தாள் லட்சுமி. ஏனோ அவளுடைய அந்தக் கண்ணீர் அவனுடைய உள்ளத்தில் அதுவரையில் நிறைந்திருந்த ஆனந்தத்தைக் கரைக்கும் கண்ணீராக அவனுக்குத் தோன்றியது.

''நாம் இப்போது கழித்த சில நாழிகைப் பொழுது எவ்வளவு இன்பமான பொழுதென்று நினைத்துப் பார். நானும் ஒரு பெரும் போராட்டம் நடத்திவிட்டு வந்திருக்கிறேன்; அப்படியே நீயும் ஒரு போராட்டத்துக்குப் பிறகுதான் இங்கு வந்திருக்கிறாய். நம்முடைய சந்திப்புக்கும் வாழ்வுக்குமே நாமே போராடித்தான் தீர வேண்டுமென்றால், அதற்காக அஞ்சி நடுங்கினால் முடியாது. உன் அப்பா உன்னைக் கடிந்து கொண்டால்தான் என்ன? உன் எண்ணத்தை உறுதியோடு அவரிடம் எடுத்துச் சொல்லி விடு!''

லட்சுமிக்கு ஏனோ அவன் முரட்டுத்தனமாகப் பேசுவதாய்த் தோன்றியது. பெற்ற தந்தைக்கு எதிராகவே போர்க்களத்தில் வாள் வீசி அவரைத் தோல்வியுறச் செய்து திரும்பி விருப்பவன் அவன். சாளுவநரசிம்மரோ அவனுடைய தந்தை நாகமநாயக்கரைவிட வலிமை மிகுந்தவர். 'அவரோடு எப்படி என்னால் போராடி வெற்றி பெற முடியும் ?' என்று குழம்பினாள் லட்சுமி. விரைவில் எப்படியாவது மாளிகைக்குத் திரும்பி, அவருடைய கண்களில் படாமல் படுத்துறங்கி விட வேண்டுமென்று நினைத்தாள்.

குன்றுகளுக்கிடையில் சூழ்ந்த இருளினூடே, ஆற்றங்கரை ஓரமாகக் குதிரையின் குளம்பொலி கேட்டது. இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். திடுக்கிட்ட லட்சுமி விசுவநாதனின் தோளை இறுகப் பற்றிக் கொண்டாள். அவள் விழிகளில் குடிகொண்ட அச்சம் கண்டு வியப்பும் வேதனையும் அடைந்தான் விசுவநாதன்.

''நான் இங்கு வருவதாக அரியநாத முதலியாரிடம் கூறி விட்டு வந்திருக்கிறேன். அவசரச் செய்தி ஏதுமிருந்தால் வந்து தெரிவிக்கும்படி கூறினேன். ஒரு வேளை, வருபவர் அவராக இருக்கக் கூடும்'' என்றான்.

''இல்லை! நன்றாகப் பாருங்கள்!''

விசுவநாதன் தோணியைக் கரையோரத்துக்குக் கொண்டு வந்தான். உற்றுப் பார்த்தான். அவனுக்கே என்னவோ போலிருந்தது. குதிரையின் மீது வந்து கொண்டிருந்தவர் அரியநாத முதலியாரல்ல.

''என் அப்பாவேதான்!'' என்று நடுங்கும் குரலில் கூறினாள் லட்சுமி. பற்றியிருந்த அவன் தோளிலிருந்து தன் கரங்களைச் சட்டென எடுத்தாள்.

கரையோரமாகக் குதிரை வந்து நின்றது. அதிலிருந்து இறங்கி வந்தார் சாளுவ நரசிம்மர். விசுவநாதனும் தோணியைக் கரைக்குக் கொண்டு வந்தான். லட்சுமி குனிந்த தலை நிமிராமல் அவள் தந்தைக்கு அருகில் சென்று நின்றாள். அவளுடைய நடுக்கம் இன்னும் தீரவில்லை.

சாளுவநரசிம்மர் தமது குமாரத்தியின் மீது சீறி விழக் கூடும் என்றுதான் விசுவநாதன் எதிர்பார்த்தான். அப்படி அவர் அவளை அளவுக்கு மீறிக் கடிந்து கொண்டால், தானே அவளுக்குப் பரிந்து பேசவும் அவன் சித்தமாக இருந்தான். திருமணம் செய்து கொள்ளப் போகும் இருவர், நெடுநாட்கள் பிரிவுக்குப் பிறகு, சந்தித்துப் பேசி மகிழ்வது ஒன்றும் தவறல்லவே ?

ஆனால் சாளுவ நரசிம்மர் லட்சுமியைக் கடிந்து கொள்ளவில்லை. விசுவநாதனுக்கு அருகில் நெருங்கி வந்து அவன் முகத்தை உற்றுப் பார்த்தார். கோபத்தை வெளிப்படுத்திப் பழக்கப்படாத அவர் விழிகள் இப்போது அனலை உமிழ்ந்து கொண்டிருந்தன. ஆனாலும் மெல்லவே பேசினார். ஆத்திரத்தை

அடக்கிக் கொண்டு, குறி பார்த்துத் தம் பகைவனின் நெஞ்சில் வாள் பாய்ச்சுவது போல் பேசினார்.

"விசுவநாதா! உனக்கே இப்படிச் செய்வதற்கு வெட்கமாக இல்லையா? உன்னைப் பெற்று வளர்த்து மனிதனாக்கியவரின் உயிர் அங்கே தூக்குக் கயிற்றிலோ, வாள் முனையிலோ துடித்துக் கொண்டிருக்கிறது. அவரைச் சிறையில் அடைத்து வைத்து விட்டு, நீ இங்கே லட்சுமியோடு பொழுது போக்க வந்து விட்டாய். இவளுடைய மனத்தைக் கெடுத்து, என் ஆணையை மீறச் செய்து இவளை இங்கு அழைத்து வந்திருக்கிறாய். சக்கரவர்த்திகள் உன்னைப் பாராட்டியதாலேயே நீ உயர்ந்தவனாகிவிட மாட்டாய்!"

விசுவநாதனால் அவருக்கு மறுமொழி கூற முடியவில்லை. அவனுக்கு நெஞ்சை அடைத்துக் கொண்டு வந்தது. கண்களில் நீர் மல்க அவன் லட்சுமியைப் பரிதாபமாக உற்றுப் பார்த்தான். அவளுடைய துணை ஒன்றுதான் அப்போது அவனைக் காப்பாற்ற முடியும். அவள் தன் வாய் திறந்து ஒரே ஒரு சொல் சொல்ல மாட்டாளா என அவன் ஏங்கினான்.

'நான்தான் இவர்களிடம் என் தோழியை அனுப்பி வைத்தேன்' என்றோ, அல்லது, 'நான்தான் இவர்களை இங்கு வரச் செய்தேன்' என்றோ, ஒரே ஒரு சொல் அவளிடமிருந்து வந்தால் போதுமே!

ஒவ்வொரு கணமும் அவளுடைய மொழியை எதிர்பார்த்துக் காத்திருந்தான் அவன். அவள் மாலை மாலையாகக் கண்ணீர் சிந்தினாளே தவிர, நடந்த உண்மையைக் கூறும் துணிவு அவளுக்கு இல்லை. விசுவநாதன் உடல் குன்றித் தலை குனிந்தான்.

## அத்தியாயம் பதினேழு

# வெற்றியா? மகிழ்ச்சியா?

துங்கபத்திரா நதிக் கரையில் நிலவிய கொடுமை நிறைந்த மௌனத்தை விசுவநாதனும் பொறுக்க முடியவில்லை. விசுவநாதன் தலை குனிந்தது கண்டு உரம் பெற்ற சாளுவநரசிம்மர் அவனை மேலும் தம் சொற்களால் புண்படுத்தத் தொடங்கினார். அப்போதும் லட்சுமி தன் வாய் திறந்து அவனுக்குப் பரிந்து ஒன்றுமே கூறவில்லை.

"என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்!" என்று ஒரு வார்த்தை சொல்லிவிட்டு, அங்கிருந்து மெல்லத் திரும்பினான் விசுவநாதன். சாளுவநரசிம்மர் தமது குதிரையின் மீது லட்சுமியை ஏறச் செய்து விட்டுத் தாமும் ஏறி அமர்ந்தார். குதிரை வேகமாகக் கிளம்பி மறைந்தது.

விசுவநாதனுக்கு அன்று இரவு முழுவதும் உறக்கமற்ற இரவாகக் கழிந்தது. வெற்றி விழாக்கள், ஊர்வலங்கள், சக்கரவர்த்தியின் பாராட்டு இவற்றில் ஒன்றுகூட அவன் கனவில் வரவில்லை. சக்கரவர்த்தியால் பரிசளிக்கப்பட்ட உடைவாள் அவனுடைய அறையில்தான் வைக்கப் பெற்றிருந்தது. விஜயநகர சாம்ராஜ்யம் தன்னுடைய மண்ணில் பிறந்த ஓர் இளைஞனுக்கு அளிக்கக் கூடிய மிக உயர்ந்த பேற்றை அவன் பெற்றிருந்த இரவுப் பொழுது அது. ஆனால் அதுவே அவனுக்குத் தாங்க முடியாத வேதனையைக் கொடுக்கும் இரவாகவும் மாறி விட்டது.

சாளுவ நரசிம்மர் கூறிய . சொற்கள் அவனைச் சித்திரவதை செய்து கொண்டிருந்தன. என்றாலும் அவற்றிலிருந்த உண்மையை அவன் நினைத்துப் பார்த்தான். தந்தையைச் சிறைப்படுத்திவிட்டு, அவர் சிறையில் வாடும் நேரத்தில், தான் மட்டும் இன்புற்றிருக்க நினைத்தது தவறுதானே ?

வேறு எந்த நாளாக இருந்தாலும் அவன் லட்சுமியின் அழைப்பை ஏற்றுக் கொண்டு அங்கு சென்றிருக்க மாட்டான். போருக்குப் புறப்படுவதற்கு முன்பு எந்த லட்சுமி தன் தந்தையின் குறுக்கீட்டையும் மீறிக் கொண்டு வந்து அவனுக்கு வெற்றித் திலகமிட்டு அனுப்பி வைத்தாளோ, அந்த வெற்றித் திருவை அவனால் காணாமல் இருக்க முடியவில்லை. எந்தப் பெண்மணி அவனுடைய வெற்றிக்குக் குறுக்கே நின்ற சதித் திட்டத்தை அவனுக்குச் சுட்டிக்காட்டி எச்சரித்து அனுப்பினாளோ, அவளை அவன் எப்படியும் காணத் துடித்தான். வெற்றியில் அவளுக்கும் பங்கு உண்டு என்றும் அதை அவளோடு பகிர்ந்து கொள்ள வேண்டும் என்றும் அவன் விரும்பினான். அதனாலேயே, பிறர் பழித்தாலும் பழிக்கட்டும் என்று துணிந்து அன்று அவன் புறப்பட்டான்.

'திடீரென்று எப்படி லட்சுமி இவ்வளவு கோழையாக மாறினாள்? நான் பாண்டிய நாட்டில் என் அப்பாவைத் தோல்வியுறச் செய்த அதே சமயத்தில், அவள் அப்பா இங்கு அவளோடு போராட்டம் நடத்தி அவள் நெஞ்சுறுதியைக் குலைத்து விட்டாரா?...நான்தான் அவர்களை இங்கு வரச் செய்தேன்; அவர்களைக் குறை கூறாதீர்கள்!' என்று குறுக்கிட்டு அவள் மட்டும் பேசியிருந்தால்......?

'பாவம்! அந்த ஒரு சொல் ஆண் மகனுக்கு எவ்வளவு ஆற்றலைத் தருகிறது. எவ்வளவு பாதுகாப்பைத் தருகிறது என்பதை அவள் உணரத் தவறி விட்டாள்' என்று ஏங்கித் தவித்தான் அந்த வெற்றி வீரன். 'மகிழ்ச்சி வேண்டாம்; அமைதியாவது வேண்டுமே?'

மறுநாள் பொழுது புலர்ந்தது. அன்று அரண்மனையில் நாகமநாயக்கரை விசாரித்து நீதி வழங்கும் நாள். ஆகவே விசுவநாதன் மற்ற எல்லா நினைவுகளையும் விட்டொழித்து விட்டு, அதற்கான ஏற்பாடுகளைக் கவனிப்பதில் மும்முரமாக இருந்தான்.

அதிகாலையில் அவனுடைய மாளிகைக்கு வந்து சேர்ந்தார் அரியநாத முதலியார். அவருடைய முகமும் வாட்டமடைந்திருந்தது.

"சக்கரவர்த்திகளிடம் நீங்கள் தந்தையார் குறித்து வேண்டிக் கொண்டிருப்பீர்கள் என்று நினைக்கிறேன்" என்றார் முதலியார். வெற்றி விழா மண்டபத்தில் உடைவாளைப் பரிசளித்து விட்டு, அவன் விரும்புவதைக் கொடுப்பதாகச் சக்கரவர்த்தி வாக்களித்தாரல்லவா? அதைத்தான் இப்போது நினைவூட்டினார் அரியநாத முதலியார்.

"ஆம், அப்பாவின் குற்றங்களுக்கு அவரை மன்னித்தருளும்படி சக்கரவர்த்திகளிடம் வேண்டிக் கொண்டிருக்கிறேன். ஆலோசனை செய்வதாகக் கூறியிருக்கிறார்கள்."

அரியநாத முதலியாரும் சற்று ஆலோசனை செய்தார்.

"தவறுதலுக்குச் சக்கரவர்த்திகளிடம் எப்போதும் மன்னிப்புக் கிடைக்கும். இதைத் தவறுதல் என்று கூற முடியாது. சக்கரவர்த்திகளிடமிருந்து ஆணை பிறந்த பிறகும், தங்களுடைய தூது நடந்த போதும், அப்பா அவற்றுக்கு உடன்படவில்லை. மிகப் பெரிய குற்றம் இது. இந்தக் குற்றத்துக்கு மன்னிப்புக் கேட்பதற்கே எனக்குத் தயக்கமாகத்தான் இருந்தது. என்றாலும் என் துன்பம் தாங்க முடியாமல் அவர்களிடம் கேட்டிருக்கிறேன்."

"மரண தண்டனை கிடைக்காது என்ற அளவுக்கு எனக்கு நம்பிக்கை பிறந்திருக்கிறது" என்றார் அரியநாத முதலியார்; "அப்பாஜி அவர்களுக்கு அளிக்கப்பட்டது போல் சிறைத் தண்டனை விதிக்கப்படலாம்; அல்லது சக்கரவர்த்திகள் கருணை காட்ட விரும்பினால், ஆணை மீறும் மற்ற அமர நாயக்கர்களுக்கு அளிக்கப்படும் அதே தண்டனை இவர்களுக்கும் வழங்கப்படலாம்."

விசுவநாதனின் உள்ளம் பதறியது. அரியநாத முதலியார் குறிப்பிட்ட மூன்று வகைத் தண்டனைகளில் எது கிடைத்தாலுமே நாகமநாயக்கரைப் பின்னர் உயிருடன் காண்பது அரிதுதான். சாம்ராஜ்யத்தில் அவர் பணியாற்றத் தொடங்கி அது வரையில் எத்தனையோ ஆண்டுகள் ஆகிவிட்டன. பல முறைகள் அவர் பரிசில்கள் பெற்றிருக்கிறார்; பதவி உயர்வுகள் பெற்றிருக்கிறார்; பாராட்டுக்கள் பெற்றிருக்கிறார். ஒரு முறைகூட அவர் தண்டனை பெற்றதில்லை.

கூடத்துக்குள் அமரநாயக்கர்களை நுழையச் செய்து, அவர்களுக்குத் தம் கரத்தாலேயே கிருஷ்ண தேவராயர் தண்டனை வழங்கிய காட்சிகள் விசுவநாதனின் மனக் கண்ணில் விரிந்தன. 'மிகவும் குறைவான தண்டனை என்று கருதப்படும் அந்தத் தண்டனையே கிடைத்தாலும், அது என்றும் அவர்களுக்குக் கிடைக்கும் தண்டனைதானே?'

விசுவநாதனைத் தேற்றி அழைத்துக் கொண்டு அரண்மனைக்குப் புறப்பட்டார் அரியநாத முதலியார். சபைக் கூட்டத்துக்காகப் பலர் அங்கே வந்து காத்திருந்தனர். சந்திரசேகர பாண்டியரும் வந்திருந்தார். சாளுவநரசிம்மரின் விழிகள் இரத்தச் செப்பாக மாறியிருந்தன. யாரிடமும் அவர் எதுவும் பேசவில்லை. விசுவநாதனைத் திரும்பிக் கூட அவர் பார்க்கவில்லை.

சபை தொடங்கியது. கிருஷ்ணதேவராயர் வந்து அரியாசனத்தில் அமர்ந்தவுடன், "நாகமநாயக்கரைச் சபைக்கு அழைத்து வாருங்கள்!" என்று கட்டளை யிட்டார் சாளுவநரசிம்மர்.

விசுவநாதனுக்கு அங்கு அமர்ந்திருக்கவே பிடிக்கவில்லை. பதறிய அவன் தோள்மீது அரியநாத முதலியார் அன்போடு தம் கரத்தைப் போட்டு அவனை அணைத்துக் கொண்டார்.

(தொடரும்)




O—O—O—O—O— கடிதக் கனிகள்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பல் வேறு துறைகளில் பயிலும் பத்தொன்பது மாணவர்கள் சேர்ந்து "கடிதக் கனிகள்" என்னும் நூலை வெளியிட்டுள்ளார்கள்.

பல துறையினர் — மாணவர் — தங்கள் படிப்புக்கு இடையில் இம்முயற்சியில் ஈடுபட்டு ஒற்றுமையாக உழைத்திருக்கிறார்கள். எல்லாக் கடிதங்களுமே இலக்கியச் சுவையும் நயமும் பொருந்தியுள்ளன.

பண்பட்ட உள்ளத்திலிருந்தும் முகிழ்க்கும் தெளிந்த சிந்தனைகளையே காண்கிறோம். செஞ்சொல் ஆட்சியும், கற்பனை வளமும், கருத்துச் செறிவும், உணர்ச்சிப் பெருக்கும் அற்புதமாக அமைந்துள்ளன. நம் சிந்தையைக் கிள்ளும் அறிவொளியின் கதிரான உணர்ச்சியன்றி, சிந்தனைக் குழப்பமோ, வெறியோ, ஆரவாரமோ அணுவளவும் இல்லை. அறிவியல், பொருளியல், அன்பியல், ஆன்ம இயல், மனித இயல், மொழி இயல் எல்லாத் துறைகளிலும் புகுந்து அநாயாசமாக விளையாடி வெற்றிக் கொடி நாட்டி விட்டார்கள் இந்த இளைய பாரதத்தினர். 'கடிதக் கனிகள்' பெயருக்கு ஏற்ப, கனிந்த அறிவின் சுவையாகவும், பழுத்த பண்பின் குலையாகவும், தேர்ந்த சிந்தனையின் சுரங்கமாகவும் விளங்குகின்றன.

இந்நூலின் தொகுப்பாளரும் ஒரு மாணவர்தான் என்பது குறிப்பிடத் தக்கது. அவர் அறிமுகக் குறிப்புகள் மிகச் சுவையானவை.

— பி. சௌந்தரா

கிடைக்குமிடம்: வி. பி. எஸ். புக் ஷாப், அண்ணாமலை நகர்.

# புல்லரிக்கும் மக்ளீன்ஸ்

## சுவை மூலம்

## உங்கள் வாய்க்குப் புதுமலர்ச்சி புகட்டுவீர்!




மக்ளீன்ஸ்
3 வகைகளில்
செயலாற்றுகிறது

1 சுத்தமாக்க — சொத்தை விழக் காரணமான உணவுத் துணுக்குகளை அகற்றுகிறது.

2 வெண்மையாக்க — மங்கல் படலத்தைப் போக்கிப் பற்களுக்கு மெருகிடுகிறது.

3 காக்க — திட வலுவுள்ள ஆரோக்கியமுடன் உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கிறது.

அதிவெண்மையான பற்களுக்கு —

**மக்ளீன்ஸ்**






*ரஷ்யாவில் 1903ம் ஆண்டிற்கு முன்னும் பின்னும் கிஷ்நேவ் என்ற நகரில் யூதர்கள் படுகொலை செய்யப்பட்டார்கள். இன்னும் பலவித அட்டூழியங்களால் பாதிக்கப்பட்டார்கள். அதற்கு டால்ஸ்டாய் மகான் வன்மையாகக் கண்டனம் செய்ததுடன், பாதிக்கப்பட்ட யூதர்களின் குடும்ப நிவாரணத்துக்கு நிதி திரட்டுவதற்காக மூன்று சிறுகதைகளையும் எழுதி உதவினார். அவற்றுள் ஒன்று இந்தக் கதை.*

தென் அமெரிக்க இந்தியர்களிடையே இக்கண்ட கதை வழங்கி வருகிறது.

வேலை செய்ய வேண்டிய அவசியம் இல்லாமலும், இருப்பிடமோ, உடைகளோ தேவைப்படாதவாறும் கடவுள் முதன் முதலில் மனிதர்களைப் படைத்தார். அவர்கள் நூறு வயது வரை வாழ்ந்தார்கள். நோய் என்பதே அவர்களுக்குத் தெரியாமல் இருந்தது.

காலம் ஓடியது. மனிதர்கள் எப்படி வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைக் காணக் கடவுள் ஒரு சமயம் விரும்பினார். அவர் வந்து பார்த்தபோது, மனிதர்கள் சந்தோஷமாக வாழ்க்கையை அனுபவித்துக் கொண்டிருக்கவில்லை. ஒவ்வொருவனும் தன்னைப் பற்றிய சிந்தனையிலேயே மூழ்கியிருந்தான். எல்லோரும் ஒருவரோடு ஒருவர் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள்.

இதைக் கண்ட கடவுள், மனிதர்கள் வேலை செய்யாமல் வாழ முடியாத நிலையை உண்டு பண்ணினார்.

''உழைப்பு அவர்களை ஒன்று படுத்திவிடும். ஒருவன் தனியாக மரத்தை வெட்டவும், மரக் கட்டைகளை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குக் கொண்டு செல்லவும், வீடுகள் கட்டவும் முடியாது. அதே போல் ஒருவன் தானாகக் கருவிகள் தயாரித்துக் கொள்வதும், விதைப்பதும், அறுவடை செய்வதும் சாத்தியம் இல்லை. தனி ஒருவனாக நூற்று, நெசவு போட்டு, உடைகளைத் தைத்துக் கொள்ளவும் இயலாது. எவ்வளவுக்கு எவ்வளவு அதிக நேசத்தோடு ஒன்று கூடி உழைக்கிறார்களோ, அவ்வளவுக்கு அவ்வளவு அதிகக் காரியங்களைச் சாதிக்க முடியும் என்பதையும் தங்கள் வாழ்க்கையும் நன்றாக இருக்கும் என்பதையும் அவர்கள் உணர்ந்தே தீருவார்கள். அது அவர்களை ஒன்றுபடுத்தி விடும்'' என்று நினைத்தார் கடவுள்.

மேலும் சிறிது காலம் சென்றது. மனிதர்கள் எப்படி வாழ்கிறார்கள் என்பதைக் காணக் கடவுள் திரும்பவும் வந்தார்.

இப்பொழுது முன்னைவிட மோசமாக மனிதர்கள் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் ஒன்று சேர்ந்து வேலை செய்தார்கள். ஆனால் எல்லோரும் ஒன்று சேராமல் சிறு சிறு கூட்டங்களாகப் பிரிந்து வேலை செய்தார்கள். ஒவ்வொரு கூட்டமும் மற்றொரு கூட்டத்தை வேலை செய்ய விடவில்லை. ஒருவருக்கொருவர் தடங்கல்களை உண்டுபண்ணிக் கொண்டிருந்தார்கள். சண்டை போடுவதிலேயே காலத்தையும் சக்தியையும் விரயமாக்கிக் கொண்டிருந்தார்கள். அது எல்லோருக்குமே கேடாக முடிந்தது.



— டால்ஸ்டாய் —

இந்த நிலையும் சரியாக இல்லை என்பதைப் பார்த்த கடவுள், மனிதர்கள் தங்களுக்கு எந்த நிமிஷத்தில் மரணம் சம்பவிக்கும் என்பதை அறிந்து கொள்ள முடியாதவாறு செய்து, எந்த நிமிஷத்திலும் சாகக் கூடியவர்களாக அவர்கள் நிலையை மாற்றி அமைத்தார். இதை அவர் மனிதர்களுக்கு அறிவிக்கவும் செய்தார். 'இதனால் ஒருவர் மீது ஒருவர் துவேஷம் கொள்ள மாட்டார்கள். தங்களுக்குக் கிடைத்துள்ள வாழ்நாளைப் பாழாக்க மாட்டார்கள்' என்று கடவுள் நினைத்தார்.

ஆனால் நடைமுறை அப்படியில்லை. மனிதர்கள் எப்படி வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பார்க்கக் கடவுள் திரும்பவும் வந்தபோது அவர்கள் வாழ்க்கை அபிவிருத்தி அடையவில்லை என்பதைக் கண்டார்.

எந்த நேரத்திலும் மனிதர்கள் சாகக்கூடியவர்களாக இருக்கும் நிலையைத் தங்களுக்கு அனுகூலமாக்கிக் கொள்ள நினைத்து, மற்றவர்களை விடப் பலசாலிகளாக இருந்தவர்கள் சிலரைக் கொன்றும், பிறரைக் கொன்று விடுவதாகப் பயமுறுத்தியும், பலஹீனர்களைத் தங்கள் ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்தார்கள். அதன் காரணமாகப் பின்கண்ட விதமான வாழ்க்கை உருவாகி விட்டது. பலம் மிகுந்தவர்களும், அவர்களுடைய சந்ததியார்களும் வேலையே செய்யவில்லை.. சோம்பேறித்தனத்தினால் பரிதாபகரமான நிலையை அடைந்தார்கள். பலம் குறைந்தவர்கள் சக்திக்கு மீறி அதிகப்படியாக வேலை செய்து, ஓய்வு கிடைக்காமல் மனம் உடைந்து போனார்கள். இரு சாராரும் பரஸ்பரம் ஒருவரையொருவர் வெறுத்தனர்; ஒருவரை யொருவர் பார்த்துப் பயப்பட்டனர். மனிதர்களின் வாழ்க்கை இன்னும் துன்பமயமாகி விட்டது.

கடவுள் இதைப் பார்த்தார். நிலைமையைச் சரிபண்ணுவதற்காக அவர் தம்முடைய கடைசி உபாயங்களைப் பிரயோகிக்கத் தீர்மானித்து, மனிதர்களுக்கு எல்லா விதமான நோய்களையும் கொடுத்தார். ''எல்லோரும் நோய்வாய்ப்படக் கூடியவர்களாக இருந்தால் ஆரோக்கியமாக இருப்பவர்கள் நோயாளிகளைக் கண்டு இரக்கப்படுவார்கள். உதவி செய்வார்கள். பிறகு அவர்களே நோய்வாய்ப்படும்போது அவர்களுக்கு ஆரோக்கியமாக உள்ள மற்றவர்கள் உதவுவார்கள்'' என்று கடவுள் நினைத்தார்.



மனிதர்களை விட்டுக் கடவுள் போனார். ஆனால் அவர்கள் எப்படி வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைக் காண அவர் திரும்பவும் வந்தபோது, நோய்வாய்ப்படக் கூடியவர்களாக ஆக்கப்பட்ட பின் மனிதர்களின் வாழ்க்கை இன்னும் மோசமாகி விட்டது.

எந்தக் கஷ்டங்கள் மனிதர்களை ஒன்று சேர்க்கும் என்று கடவுள் நினைத்தாரோ, அந்தக் கஷ்டங்களே அவர்களை மேலும் அதிகமாகப் பிரித்து விட்டன. பலத்தைப் பிரயோகித்து மற்றவர்களைத் தங்களுக்கு வேலை செய்ய வைத்த பலம் மிக்கவர்கள், இப்பொழுது தாங்கள் நோய்வாய்ப்பட்ட சமயத்தில் அதே போல் பலத்தைப் பிரயோகித்தே மற்றவர்களைத் தங்களுக்குச் சேவை பண்ணும்படியும் செய்தார்கள். ஆனால் அவர்கள் மட்டும் நோயாளிகளைப் பற்றிக் கவலைப்படவில்லை. அதே சமயத்தில் நிர்ப்பந்தப்படுத்தப்பட்டு மற்றவர்களுக்காக வேலை செய்யவும் நோயாளிகளைக் கவனித்துக் கொள்ளவும் நேர்ந்தவர்கள் வேலை மிகுதியினால் களைத்துப் போய், தங்கள் குடும்பத்தைச் சேர்ந்த நோயாளிகளைக் கவனிக்க நேரமில்லாமல் அவர்களை நிராதரவாகக் கைவிட்டார்கள்.

இந்த நோயாளிகள் எதிரே வந்தால் பணக்காரர்களின் உல்லாசப் பொழுது போக்குகளுக்கு இடைஞ்சலாக இருக்கும் என்று நோயாளிகளுக்கு விடுதிகள் கட்டினார்கள். அங்கே இரக்கம் காட்டுகிறவர்கள் யாரும் இல்லை. கூலிக்கு நியமிக்கப்பட்ட ஆட்களே இருந்தார்கள். அவர்கள் இரக்க உணர்ச்சி இன்றி சேவை செய்து கொண்டிருந்ததோடு வெறுப்பும் வேறு காட்டினார்கள். அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டு நோயாளிகள் கஷ்டப்பட்டார்கள். இது ஒருபுறம் இருக்க, பெரும்பாலான நோய்கள் தொற்றக்கூடியவை என்பதைக் கண்டறிந்தார்கள். தங்களுக்கு நோய் தொற்றிவிடக் கூடாதே என்று பயந்து நோயாளிகளின் பக்கம் நெருங்காமலும், நோயாளிகள் தங்கள் அருகில் வந்தால் விலகிச் செல்வதுமாக இருந்தார்கள்.

அப்பொழுது கடவுள், ''இந்த உபாயத்தினால் மக்கள் தங்களுடைய சந்தோஷம் எதில் இருக்கிறது என்பதை உணரும்படி செய்ய என்னால் முடியாமல் போய்விட்டது. எனவே, அவர்களே அதைத் தங்கள் துன்பங்களின் மூலம் கண்டறியட்டும்'' என்றார்.

சந்தோஷமாக இருக்க முடியும் என்பதையும், சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பதையும் உணராமலே மனிதர்கள் தனித் தனியாகப் பிரிந்து வெகு காலம் வாழ்ந்தார்கள். அப்புறம்தான், அவர்களில் சிலர், உழைப்பு என்பது சிலருக்கு ஒதுக்கித் தள்ளக் கூடிய பயங்கரமான விஷயமாகவும், மற்றவர்களுக்குக் கட்டாயக் கடுங்காவல் தண்டனையாகவும் இருக்கக் கூடாது என்றும், அது எல்லோரையும் ஒன்று சேர்க்கும் பொதுவான இன்பகரமான காரியமாகவும் இருக்க வேண்டும் என்றும் உணரத்தொடங்கினார்கள். நோய் என்பது விலகி நிற்பதற்கான காரணமாக இல்லாமல், பரஸ்பரம் அன்போடு கூட்டுறவு கொள்வதற்கான ஒரு காரணமாக இருக்க வேண்டும் என்பதையும் அவர்கள் உணரலானார்கள்.

—கு. அழகிரிசாமி

# உமா சமர்த்தா!

ரா. கணபதி

"என்ன பரிதாபமான காட்சி பார்த்தீர்களா?" என்று தனது வீணைக் குரல் துக்கத்தில் இடறக் கூறினாள் அம்பிகை ஈசுவரனிடம்.

கரும்பின் ஆங்காங்கு கணுக்கள் இருப்பது போல், அவள் குரல் வழுவழுப்பாக ஓடாமல் ஆங்காங்கு இடறியதும் அழகாகத்தான் இருந்தது.

ஈசுவரன் அவள் காட்டிய திசையில் நோக்கினான்.

அங்கே,

கமலி என்று ஓர் அம்மா; முப்பது வயதிருக்கலாம்.

உமா என்று அவளுடைய பெண்; பத்து பிராயம் இருக்கும்.

அந்தப் பத்து வயசு உமாவுக்குக் கமலி சபோடா துண்டுகளை வாயில் ஊட்டிக்கொண்டிருந்தாள். உமா 'தூ, தூ' என்று அவற்றைத் துப்பிக் கொண்டிருந்தாள்.

"ஐயோ, இந்த அசட்டுப் பெண் எப்போதுதான் சமர்த்தாகுமோ!" என்று குமுறினாள் கமலி. அவளுடைய கண்ணிமைக்குள்ளும் தொண்டைக்குள்ளும் ஏதுவோ இறுகிக் கனத்தது.

"ஏம்மா, குழந்தைக்கு.....?" என்று நிறுத்தினாள் சபோடா கடைக்காரி. வியாபாரத்தை முடித்து விட்டு இலேசில் நகருகிற வழக்கம் அவளுக்குக் கிடையாது.

உமாவுக்கு என்ன கோளாறு என்பதைக் கமலி எப்படி வாய்விட்டுக் கூறமுடியும்?



மற்றவர்கள் 'அப்படி'த்தான் கூறினார்கள். அதுதான் உண்மை. ஆனாலும் கமலி 'அசடு' என்பதற்கு மேல் பெரிய வார்த்தையைச் சொல்ல மாட்டாள். "சமர்த்தாக வேண்டுமே இந்தப் பெண்" என்றுதான் சொல்வாளேயொழிய வேறு விதமாகப் பேசமாட்டாள். தாயல்லவா?

ஆனால் மற்றவர்கள் சொன்னது உண்மை என்று அவளுக்குத் தெரியும். அவளுடைய கணவனுக்கும் தெரியும். நிறைய வைத்தியம் பார்த்தார்கள். பலனில்லை. உமா, கமலியின் பாஷையில், அசடாகவே இருந்தாள்.

"பொராத்தனே ஏதானும் செஞ்சிக்கிடறதுதானேம்மா?" என்று பரிவுடன் கேட்டாள் சபோடாக்காரி.

"எல்லாம் வேணது செஞ்சாச்சு. தெய்வத்துக்குக் கண்ணில்லே" என்றாள் கமலி.

அவளுக்குக் கண் இருந்தது; எனவே அது கண்ணீரும் வடித்தது.

'அவன் என்ன சொன்னான் கேட்டாயா?' என்றான் கைலாசநாதன் கல்யாணியிடம். "இரண்டு கண் போதாது என்று எனக்கு மூன்றாவது கண் வேறு இருக்கிறது. இவள் 'கண்ணில்லே' என்று சொல்லிவிட்டாளே!" என்றான்.

தெளிவிருந்தும் துயரத்தைப் பொறுக்க முடியவில்லை. பதி



யிடம் கோபமும் வந்தது. அவளுடைய பச்சைப் பசும் முகத்தில் நாசி நுனியில் சிவப்பு ஏறிற்று. மூக்கில் பழுக்கத் தொடங்கியிருந்த மாங்கனிபோல் மனோகரமாக விளங்கிய தேவியின் திருமுகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான் பசுபதி. துக்கத்தில் அவளுடைய உதடுகள் துடித்தன. கோபத்தில் அவற்றினின்று வார்த்தைகளும் உதிர்ந்தன.

''மூன்றாவது கண் இருந்து என்ன பயன்? அதில் கண்ணீர் பிறந்தால்தானே கண் இருக்கும் பயன் பூர்த்தியாகும்? உங்கள் கண்ணில் தீயல்லவா பிறக்கிறது? இப்படி மக்களையெல்லாம் தீயில் வாட்டி வதக்குவதற்குத்தானே?'' என்று படபடத்தாள் பவானி.

''அதென்னமோ, இப்போது என்னிடம் தீயில்லையம்மா'' என்று குறும்பாகவே கூறினான் நீலகண்டன். அம்பிகை சுடச் சுட வார்த்தைகளை வீசியது கூடச் சூடான பூந்திகளை இட்டாற் போலத்தான் அவனுக்கு இனித்தது.

கயிலையில் சிறிது நேரம் மௌனம் நிலவியது.

அவன்தான் 'ராஜி' பேச முதலடி வைத்தான் — அப்படித்தான் வழக்கம்.

''தேவி, உனக்குத் தெரியாததா? எல்லாம் அறிந்தவள் நீ! ஞானாம்பிகையாயிற்றே'' என்று உள்ளார்ந்த மதிப்புடன் கூறினான் மகாதேவன்.

''அதுசரி, அஞ்ஞானமும் நான்தானே!'' என்று பளிச்சென்று கேட்டாள் அன்னை.

''எல்லாம் நீதான்.''

''இப்போது நான் அஞ்ஞானாம்பிகையாகத்தான் இருக்கப் போகிறேன். அப்போதுதான் இதயம் உருகுகிறது.''

''சரி, உன் பிடிவாதத்தை நான் எப்படி மாற்ற முடியும்? இருந்தாலும் என்னிடம் ஏன் குறைப்பட்டுக் கொள்கிறாய்? நீயேதான் எதையும் சாதித்துக் கொள்ள முடியுமே! நீதானே சக்தி!''

''அ-சக்தியும் நான்தானே?''

''எல்லாம் நீயேதான்.''

''இப்போது நான் அசக்தியாகத்தான் இருக்கப் போகிறேன். உங்களை எதிர்பார்த்து எனக்காகச் செயலில்லாமலிருந்தால்தான் பணிவாக இருக்க முடிகிறது. ....உங்களைத்தான் நான் நம்பியிருக்கிறேன் என்பதால் நீங்கள் இப்படிக் கருணையை அடியோடு துடைத்து விடலாமா? என்னிடம் கருணை காட்டாவிடினும் அந்தக் குழந்தை உமாவுக்கு நீங்கள் அருள் செய்துதானாக வேண்டும்.''

''நான் கருணையைத் துடைத்துவிட்டேன் என்கிறாய். உனக்கும்தான் என்னிடம் கருணை கிடையாது. இந்தக் குழந்தையிடம் உனக்குள்ள பரிவுகூட என்னிடம் கிடையாது. என்னையும்தான் எல்லோரும் பித்தன் என்கிறார்கள். 'பித்தா, பிறை சூடி' என்றே பாடி விட்டான் சுந்தரன். நீ கொஞ்சமாவது எனக்குக் கருணை காட்டியிருப்பாயா? ஆக, நமக்குள் ஒருவருக்கொருவர் கருணை காட்டாததில் சமமாகி விட்டோம். அதோ கருணையை அங்கே பார்'' என்று பூலோகத்தைக் காட்டினான் பசுபதி.

தேவி நோக்கினாள்.

சபோட்டாக்காரிக்குக் காசு எடுத்து வருவதற்காகக் கமலி உள்ளே சென்றிருந்தாள். உமா தனக்காக அவள் உரித்து வைத்திருந்த துண்டுகளையெல்லாம் பார்த்தாள். சபோட்டாக்காரியோடு நீளமான பசித்த கண்களுடன் உட்கார்ந்திருந்த அவளுடைய குழந்தையையும் பார்த்தாள். என்ன தோன்றிற்றோ, சபோட்டாத் துண்டுகளையெல்லாம் ''இந்தா, இந்தா'' என்று அந்தக் குழந்தையின் வாயிலேயே திணித்தாள்.

''அம்மா பார்த்தாத் திட்டுவாங்கோ. பணத்தை நீயே வைச்சுக்கோ கொழந்தே'' என்று பழக்காரி மன்றாடியும் பயனில்லை.

வாய் நிறையத் திணிக்கப்பட்ட மதுரத்தைச் சுவைத்தது அவளுடைய குழந்தை.

''பார்த்தாயா கருணையை?'' என்றான் பராத்பரன்.

''இவ்வளவு நல்ல குழந்தையை நீங்கள் சோதிக்கலாமா?'' என்று புதிய முனையைப் பிடித்துக் கொண்டாள் கருணாகரி.

''அதில்தான் விஷயமே இருக்கிறது. சிந்தித்துப் பார்த்தால் உனக்கே தெரியும்.''

''நான் சிந்திக்க மாட்டேன். எனக்கு எதுவும் தெரிய வேண்டாம். இந்தக் குழந்தையை நீங்கள் சமர்த்தாக்க வேண்டும். அது ஒன்றுதான் இப்போது எனக்கு வேண்டியது....''

'சமர்த்தாக்க வேண்டும்' என்ற சிறிய வார்த்தையைத்தான் தேவியும் சொன்னாள்— கமலி போலவே. எல்லாத் தாயார்களும் ஒரே மாதிரிதான் பேசுவார்கள்.

''அப்படியே! உன் பிடிவாதத்துக்கு நான் எதிர் வாதம் செய்ய முடியுமோ?'' என்று விட்டுக் கொடுத்து விட்டான் ஐயன்.

தேவி பரம நிம்மதியுடன் ஆழ்ந்து ஒரு மூச்சு விட்டாள். ''ஆகா, என்ன சுகமான தென்றல் வீசுகிறது!'' என்று பூலோகத்தில் பேசிக் கொண்டார்கள்.

ஃ ஃ ஃ

**பண்டிட் பிஷுக்**
**சித்தக் கோளாறுகளை நீக்கும்**
**வைத்திய நிபுணர்**

என்பதாகப் புதியதொரு பெயர்ப் பலகை அந்த ஊரில் தொங்கி, உமாவின் தகப்பனார் நாராயணனின் கண்களிலும் பட்டது. ஈசுவரன் செயல்!

நாலாயிரம் உணர்ச்சிகள் மோதக் கமலியும் நாராயணனும் குழந்தை உமாவைப் பண்டிட் பிஷுக்கிடம் அழைத்து வந்தார்கள். வைத்தியத்துடன் மந்திரம், தந்திரம் எல்லாம் தெரிந்த அந்த வடக்கத்திக்காரர் ஏதோ அற்புத மூலிகை வைத்திருந்தாராம். நிச்சயமாகக் குழந்தையைக் குணப்படுத்திவிட முடியும் என்று நம்பிக்கை அளித்தார்.

மருந்துகள் வாங்கி வந்தார்கள்.

சிற்சில நாட்களிலேயே உமாவிடம் சிறு சிறு மாறுதல்கள் தோன்றி வந்தன. ஆனால்

## உங்கள் குழந்தையை ஆரோக்கியமுடன் குதூகலமாக வைத்திருக்க உறுதுணை

# உட்வர்ட்ஸ்

குடல் வலி, புளிப்பு, உப்புசம், பல்முளைப்புப் பருவக் கோளாறுகள் ஆகியவற்றிலிருந்து உடனடி நிவாரணம் தருவது உட்வர்ட்ஸ். எப்போதும் உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உங்கள் வசம் இருக்கட்டும்.




100 ஆண்டுகளுக்கு மேலாக புத்திசாலித் தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டுவருகிறது.

பூரணமாகப் புத்தி தெளிந்துவிட்டதற்கு இந்த அறிகுறிகள் போதா என்றார் பிஷக்.

வைத்தியம் தொடர்ந்தது.

இப்போது அவர் வைத்தியராக மட்டுமின்றி அக் குடும்பத்தின் நண்பராகவும் ஆகிவிட்டார். அவர் ஒரு நாள் அவ் வீட்டுக்கு வந்திருக்கையிலேயே,–

சபோட்டாக்காரியும் வந்தாள்.

கமலி சபோட்டா வாங்கினாள்.

உமா ஒரு பழத்தைத் தானாகவே எடுத்து வாயில் வைத்துக் கடித்தாள்.

"பார்த்தீர்களா, பார்த்தீர்களா! முன்னெல்லாம் ஊட்டினால்கூட தின்னத் தெரியாது. இப்போ தானாகவே எடுத்துத் தின்கிறாள்" என்று வைத்தியரிடம் மகிழ்ச்சியுடன் கூறிய கமலி, குழந்தையிடம் திரும்பி "இங்கே தாம்மா, நான் தோல் உரிச்சுத் தரேன்! அப்படியே சாப்பிடக் கூடாது" என்று கையை நீட்டினாள்.

உமா பழத்தை அம்மாவின் கையில் வைத்தாள். கமலி அதை உரிப்பதையே பார்த்துக்கொண்டிருந்தாள். இன்னொரு பழத்தை எடுத்துத் தானும் அதே போல் உரிக்க முயன்றாள்.

"பண்டிட்ஜி, உங்களுக்குக் கோயில் கட்டிக் கும்பிடணும்" என்றார்கள் கமலியும், நாராயணனும்.

"அதற்குள் அவசரப்பட்டு விடாதீர்கள்" என்றார் பண்டிட் பிஷக்.

"என்ன பண்டிட்ஜி இப்படிச் சொல்கிறீர்கள்! இவ்வளவு தூரம் குணமாகியும் நீங்கள் இன்னும் திருப்திப்படவில்லையா? நீங்கள் அதிசய டாக்டர். நாங்கள் திருப்தியடைந்தால் கூட உங்கள் வைத்தியத்தில் நீங்களே திருப்திப்பட மாட்டேன் என்கிறீர்களே" என்றான் நாராயணன்.

"நாராயண், இது ரொம்பச் சிக்கலான விஷயம். புத்தியின் பூரணப் பிரயோகமில்லாமலே உள்ளுணர்ச்சியின்மேல் பல காரியங்களைச் செய்துவிடலாம். அதேபோல் அறிவை முழுவதும் உபயோகிக்காமலே பிறர் செய்வதைப் பார்த்து அதேபோல் தானும் செய்ய முயலலாம். பசி ஓர் உள்ளுணர்ச்சி. இதனால்தான் உமா பழத்தைக் கடித்தாள். பிறகு உங்கள் மனைவி தோலை உரிப்பதைப் பார்த்தவுடன் அதைப் பார்த்துத் தானும் அப்படியே முயன்றாள். இவற்றைக் கொண்டு அவள் முற்றிலும் புத்தி பூர்வமாகச் செயல்படுகிறாள் என்று சொல்லிவிட முடியாது" என்றார் பிஷக்.

'இன்ஸ்டிங்க்ட்', 'இமிடேஷன்', 'இன்டெலிஜென்ஸ்' இவைபற்றி யெல்லாம் தான் எப்போதோ படித்தது நாராயணனுக்கு நினைவு வந்தது.

"அதோ உமாவைப் பாருங்கள்" என்றார் பிஷக்.

அன்று போலவே இன்றும் கமலி சில்லறை எடுத்து வரப் போயிருந்தாள். சபோட்டாக் காரியின் குழந்தைக்கு இன்னமும் பழைய நினைவு இருந்ததோ என்னவோ, அது உமாவைப் பார்த்துக் கையை நீட்டியது. உமா தன் வாய்வரை கொண்டு போயிருந்த சபோட்டாவை அந்தக் குழந்தையின் கையில் வைத்துவிட்டாள்.

பிஷக்கின் வைத்திய அறிவு இதற்கு விளக்கம் தந்தது: "நாராயண், சற்று முன் உமா கையை நீட்டியவுடன் உங்கள் மனைவி அதில் சபோட்டாச் சுளையை வைத்தாள். அதன் நகலாகவே இப்போது உமாவும் இந்தக் குழந்தை கையை நீட்டியவுடன் அதில் கனியைப் போடுகிறாள். தான் உண்ண வேண்டுமென்ற அறிவுகூட மறந்துவிட்டது பாருங்கள். அதனால்தான் எனக்குக் கோபியெடுக்க இன்னும் கொஞ்சம் பொறுங்கள் என்றேன்."

அதுவரை நடைபெற்றதெல்லாம் அம்பிகைக்கு மனக் குளிர்ச்சியாக இருந்தது. கடைசியாக வைத்தியர் கூறியது தான் அவளுக்குக் கடுத்தது. முகத்தில் கேள்விக் குறியுடன் சுகவரிவைப் பார்த்தாள்.

"பிரபல வைத்தியர் – சித்தக் கோளாறுகளைத் தீர்ப்பதில் நிபுணர் – பண்டிட் பிஷக் சொன்னால் நாம் மறுக்க முடியுமா?" என்று தோள்களைக் குலுக்கினான் தேவ தேவன்.

அம்பிகை யோசிக்கலானாள்.

ஃ ஃ ஃ

பிஷக்கின் வைத்தியம் தொடங்கி இப்போது ஒரு மண்டலம் முடிந்து விட்டது. சாதாரணமாக இதற்குள் எந்தச் சித்தக் கோளாறும் தீர்ந்திருக்க வேண்டும். நாற்பதாவது 'டோஸ்' அவரது அற்புத சஞ்சீவினியைச் சாப்பிட்டவுடனேயே இடிரென்று மேகம் விலகிச் சூரியன் பளிச்சிடுவது போல், கலக்கம் தெளிந்து, நரம்பு மண்டலம் சரிவரச் செயலாற்றத் தொடங்கி விடுமாம்.

இன்றும் அவரே நாராயணனின் வீட்டுக்கு வந்திருந்தார்.

குழந்தை உமாவைப் பரிசோதித்ததில் அவருக்கு முழுத் திருப்தி உண்டாகவில்லை.

"உங்களுக்கு ரேடியோவில் பாட அரைமணி நேர சான்ஸ் தான் தருகிறோமென்று மிகவும் வருத்தப்பட்டீர்களே; அடுத்த மாதம் காலை 6 மணி முதல் 6 - 05 வரை, 10 மணி முதல் 10 - 05 வரை, பகல் 12 மணி முதல் 12 - 05 வரை, மாலை 3 மணி முதல் 3 - 05 வரை, 4 மணி முதல் 4 - 05 வரை, இரவு 11-55 மணி முதல் 12 - 00 வரை என்று முழு நாள் கச்சேரிக்கு சான்ஸ் தருகிறோம்!"

"சரி, இன்றைக்கு வேறொரு ஸ்ட்ராங்க் கஷாயம் தருகிறேன். அதை மட்டும்தான் குழந்தைக்குக் கொடுக்க வேண்டும். வேறு ஆகாரம் எதுவுமே கூடாது. தீர்த்தம் கூடத் தரப்படாது. நாளைக்குப் பார்த்துவிட்டுச் சொல்கிறேன்" என்றார்.

இச்சமயத்தில் அந்த வீட்டை வாடிக்கை பிடித்துவிட்ட சபோடாக்காரியும் வாசலில் வந்து சேர்ந்தாள்.

"அவளைப் போகச் சொல். உமாவுக்கு இன்னிக்கு எந்த ஆகாரமும் தரப்படாதாம்" என்றான் நாராயணன்.

"அதனுலென்ன! நீங்க அவனை உள்ளேயே பார்த்துக்கோங்கோ. நான் இன்னிக்குக் காமுப் பாட்டியைப் பார்த்துவிட்டு வரப் போறேன். பாட்டிக்குச் சபோடான்னு உசிரு. அவளுக்காகக் காதும் காதும் வச்சாப்போல பழம் வாங்கிண்டு வந்துடறேன். உமா வாசலுக்கு வராமே நீங்க கொஞ்சம் காபந்து பண்ணிக்கோங்கோ" என்றாள் கமலி.

ஆனால் இன்றைக்குக் காதும் காதும் வைத்தாற்போல் காரியங்கள் நடக்க, சபோடாக்காரியின் குழந்தை அனுமதிக்கவில்லை. அவள் கூடையைக் கீழே இறக்கியவுடனேயே அது அழுது சண்டித்தனம் செய்யத் தொடங்கியது. கமலி "குழந்தைக்குத்தான் ஒரு பழம் குடேண்டி" என்று கூடைக்காரியிடம் ஆக்ஞாபித்தாள்.

"பெரிய டாக்டர் ஐயா வந்திருக்காரடி! கொழந்தையை இப்படிக் கத்த விடாதே. அதன் அழுகையை நிறுத்திவிட்டு அப்புறம் வியாபாரம் பண்ணுவியாம்!" என்றாள்.

வேறு வழியின்றி ஒரு பழத்தைக் குழந்தையின் கையில் எரிச்சலுடன் திணித்தாள் பழக்காரி. அது இன்னொரு கையையும் நீட்டியது. "தொலைச்சுக்கோ" என்று இன்னொன்றையும் மறு கையில் திணித்து விட்டுக் கமலியிடம் ஒரு டஜன் பழங்களை வைத்தாள்.

"துன்னுக்கிட்டு இங்கேயே இரு. எதிர் வூட்டுக்கு, பக்கத்து வூட்டுக் கெல்லாம் போய் விட்டு வந்து உன்னே இட்டுக்கிட்டுப் போறேன்" என்று கூறிக் குழந்தையை அங்கேயே விட்டுச் சென்றாள் சபோடாக்காரி.

குழந்தை சபோடாவைக் கடித்து ருசித்து. அதன் மணம் உள்ளே ஹாலில் பரவியது. அங்கு நாராயணனின் அணைப்பிலிருந்தவாறு பண்டிட் பிஷக் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த உமாவின் நாசியில் சபோடா மணம் ஏறிற்று. சடக்கென அப்பாவின் பிடியிலிருந்து விடுபட்டு வாசலுக்கு ஓடினான்.

வாசலில் சபோடாக்காரியைக் காணோம்! உடனே சமையல் உள்ளிலிருந்த அம்மாவிடம் திரும்பினான் உமா. கமலி அவசர அவசரமாகச் சபோடாப் பழங்களை ஒரு கூடையால் மூடிவிட்டு, "என்னடா கண்ணு?" என்று கேட்டாள்.

"பழம்" என்றான் உமா.

"வாங்கலியேடி தங்கம். நாளைக்கு வாங்கித் தரேன்" என்று கூறிவிட்டுக் கமலி வேறு காரியமாகப் பின்கட்டுக்குச் சென்றாள்.

உமா சமையல் உள்ளிலிருந்து வெளியே வந்தபோது அவன் கைகளில் சபோடா இருந்ததை பண்டிட் பிஷக்கும், நாராயணனும் பார்த்துவிட்டார்கள்.

"கமலிக்குத் தெரியாமல் எடுத்திருக்கிறான்" என்றான் நாராயணன்.

"இருக்கட்டும். இப்போது அவன் என்ன செய்கிறான் என்று கவனிக்க வேண்டும். இது ஒரு நல்ல பரிசோதனைக்குரிய வாய்ப்பு. பழத்தைத் தின்றாலும் பரவாயில்லை. நாளைக்குப் புது மருந்தும் பத்தியமும் வைத்துக் கொள்வோம்" என்றார் பிஷக்.

உமா யார் கண்ணிலும் படாமல் வாசலுக்கு ஓடினான். அங்கு சபோடாக்காரியின் குழந்தையைப் பார்த்ததும் அதனிடம் சென்றான்.

உமாவின் நடவடிக்கையை மறைவிலிருந்து பார்த்த நாராயணன், அவன் தனது கையிலிருந்த பழத்தைக் கூடைக்காரியின் குழந்தைக்குக் கொடுக்கப் போகிறான் என்ற 'மாறுதலை'த்தான் எதிர்பார்த்தான்.

ஆனால் நடந்தது முற்றிலும் வேறு!

உமா அந்தக் குழந்தையின் கையிலிருந்த இரண்டு பழங்களில் முழுசாக இருந்ததை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டான்.. உள்ளே அவசரமாக ஓடிவந்தான்.

சமையலறையில் சபோடாவை மூடி வைத்திருந்த கூடையை உமா தூக்கினான். தன் கையில் — தானாக எடுத்துக்கொண்ட ஒரு பழமும், வாசலில் பிடுங்கியது ஒன்றுமாக மொத்தம் இருந்த இரண்டு பழங்களில் ஒன்றைக் கூடையினடியில் தள்ளி விட்டு மீண்டும் அதை முன்போலவே மூடினான். பிறகு கையில் மீதமிருந்த பழத்தை உண்ணத் தொடங்கினான்.

பிஷக் நாராயணனின் கையைப் பெருமையுடன் அழுத்தியபடி ஹாலுக்கு வந்தார்.

"பழம் தின்கிறானே" என்றான் நாராயணன்.

"தின்னட்டுமே! உமாவுக்கும் புது மருந்தும் வேண்டாம். பத்தியமும் வேண்டாம். அவன் அறிவைச் சரியாகப் பிரயோகிக்கத் தொடங்கி விட்டான்: இனி எனக்குக் கோவில் கட்டலாம்" என்றார் பண்டிட்ஜி மகிழ்ச்சியுடன்.

"தெய்வம் கண் திறந்து விட்டது" என்றான் அங்கு வந்து சேர்ந்த கமலி நெகிழ்ச்சியுடன். "என் சமத்து உமாக் குட்டி" என்று கூப்பிட்டவாறு தன் மாஜி 'அசட்டுப் பெண்'ணைத் தேடிச் சென்றாள்.

"கௌரி, கேட்டாயா? அன்று எனக்குக் கண் இல்லை என்று சொன்னவன்[இன்று நான் கண் திறந்து விட்டதாக நற்சான்று தந்து விட்டான்!" என்றான் விசுவநாதன் தன்னையொட்டி அமர்ந்திருந்த ஜகன்மாதாவிடம்.

தேவி பேசவில்லை. அவளைச் சோகம் சூழ்ந்தது.

கண்ணீரின் ஈரத்தில் நனைந்த தேவியின் இமை வரிசையில் அவளுடைய வைர நாசிகாபரணத்தின் சுடர் பட்டு ஏழு வண்ணங்களையும் சிதறவிட்டது.

"ஆகா, என்ன அழகான வான வில் தெரிகிறது!" என்று பூலோகத்தில் பேசிக் கொண்டார்கள்.



# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன்

—அருந்ததமா





ஓர் அழகான கட்டடத்தில் இன்று நடந்து கொண்டிருந்த லேடி வில்லிங்டன் பயிற்சிக் கல்லூரியில் படிக்கும் பெண்கள், உயிர்த் துடிப்புடன், சந்தோஷமாகவும், புத்திசாலிகளாகவும் விளங்கினர். படிப்பு முடிந்ததும் வெளி உலகில் அடியெடுத்து வைத்துப் பிறருக்குக் கல்வி போதிக்க ஆவலுடையவர்களாகத் திகழ்ந்தார்கள்.

சகோதரி அவர்களை விட்டுச் செல்வது என்பது நடவாத காரியம். ஐஸ்ஹவுஸை விட்டுச் செல்வதும் நினைக்கக் கூடியதல்ல. ஆயினும் குழந்தை விவாகத்தை ஒழிப்பதற்காகப் பிரசாரம் செய்வதை விட்டுவிடவும் அவளால் முடியாது. இந்திய மாதர் சங்கத்தின் மேடைகளிலிருந்து அவள் பேசத் தடை விதிக்கப்பட்டால் தன் பிரசாரத்தைத் தொடர அவள் இதர மார்க்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டியதுதான்.

குழந்தை விவாகங்களுக்கு எதிராகப் பிரசாரம் செய்தவர்களுள் முன்னணியில் நின்ற டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி சென்னை சட்டசபைக்கு நியமிக்கப்பட்டாள். சக அங்கத்தினர்கள் அவளைத் துணைத் தலைவராகவும் தேர்ந்தெடுத்தனர். அவர்கள் அனைவரும் அவள் கொள்கைகளை ஆதரிக்கவில்லை என்றாலும், பலர் அவளுடைய அபிப்பிராயங்களை அங்கீகரித்தனர். இந்தியாவின் மற்றப் பாகங்களைப் போலவே, சென்னையிலும் குழந்தை விவாகங்களைப் பற்றிய சர்ச்சைகள் தீவிரமாக நடந்தன. நாட்கள், மாதங்கள் செல்லச் செல்லச் சச்சரவுகள் மேலும் மேலும் கைப்புப் பெறத் தொடங்கின.

சர் ஹரிசிங் கவுர் கொணர்ந்த சம்மத வயது மசோதா இன்னும் ஆலோசனையில் இருந்த போதே, மத்திய சட்டசபையைச் சேர்ந்த ஹர்பிலாஸ் சாரதா என்ற வேறோர் அங்கத்தினர் பதினான்கு வயதுக்குட்பட்ட இந்துப் பெண்களுடையவும், பதினெட்டு வயதுக்குட்பட்ட இந்துப் பையன்களுடையவும் கல்யாணங்களைத் தடுப்பதற்காக ஒரு மசோதா கொண்டு வந்திருந்தார். இச்சட்டத்தை மீறி யாரேனும் கல்யாணம் செய்தால் அக்கல்யாணங்களைச் செல்லாமல் செய்துவிட வேண்டும் என்பது மசோதாவின் ஒரு முக்கிய அம்சம். ஓர் ஆய்வுக் குழுவின் முன் இம்மசோதா பரிசீலனைக்கு வைக்கப்பட்டது. அதன் அங்கத்தினர்கள் நடந்து முடிந்துவிட்ட கல்யாணங்களைச் செல்லுபடியாகாமல் செய்யும் ஷரத்தை ஒப்புக் கொள்ளவில்லை. அதற்குப் பதிலாகப் பெற்றோர்கள், உறவினர்கள், புரோகிதர்கள் ஆகியோருக்கு அபராதங்கள் விதிக்க வேண்டும் என்று சிபாரிசு செய்தார்கள்.

சீர்திருத்தவாதிகளும், வைதிகர்களும் இந்தத் திட்டங்களைப் பற்றி விவாதித்துக் கொண்டிருக்கையில், அயல்நாட்டினர் சிலர், இந்தியாவில் மட்டுமின்றி உலகின் மற்றப் பகுதிகளிலும்கூட பொதுஜன அபிப்பிராயத்தைக் குழந்தை விவாகத்துக்கு எதிராக உருவாக்கிக் கொண்டிருந்தனர். இவர்களில் முக்கியமானவள் கேத்தரின் மேயோ (Katherine Mayo) என்ற ஓர் அமெரிக்க மாது. அவள் 'மதர் இண்டியா' (Mother India) என்ற தன் புத்தகத்தில் குழந்தைப் பிராயக்

கல்யாணங்களைப் பற்றியும், சிறு பிராயத்திலேயே தாய்மை அடைவதைப் பற்றியும், பொதுவாக இந்திய மக்களின் ஆரோக்கியமற்ற நிலைமையைப் பற்றியும் கொடூரமான முறையில் எழுதியிருந்தாள். 'ஒரு சாக்கடை மேஸ்திரியின் அறிக்கை' என்று அதை அழைத்த காந்திஜி பிரிட்டிஷாரும், அமெரிக்கர்களும் மிஸ் மேயோ எழுதியிருப்பதையெல்லாம் அப்படியே நம்ப வேண்டாம் என்றும் அது முழு உண்மையைக் கூறும் ஒரு சித்திரமல்லவென்றும் எச்சரித்திருந்தார். அதே சமயம், அதை ஒவ்வோர் இந்தியனும் படித்தால் ஓரளவு பயன் பெற்றுத் திருந்தலாம் என்றும் அவர் குறிப்பிட்டார். ''நாம் அவளுடைய மிகைப்படுத்தப்பட்ட குற்றச்சாட்டுக்களை மறுக்கலாம். ஆனால் அவள் குற்றம் சுமத்துவதற்கு அடிப்படையாக உள்ள விஷயங்களை நாம் மறுக்க முடியாது. நம்மிடையே நிலவும் சுகாதாரமின்மை, குழந்தை விவாகம் முதலியவற்றைப் பற்றி அவள் மிகையாகத்தான் சித்திரித்திருக்கிறாள் என்பதில் ஐயமில்லை. ஆயினும் இவ்வாறெல்லாம் குறை கூறுவதற்கான அடிப்படைக் காரணங்களை அகற்றும் பணியில் நாம் இன்னும் தீவிரமாக ஈடுபட ஒரு தார்க் குச்சியைப் பயன்படுத்தியது போல் அந்நூல் இருந்து உதவட்டுமே?'' என்றார் காந்திஜி.

இந்தக் கட்டுரை வெளிவருவதற்குச் சிறிது காலத்துக்கு முன்பே சுப்புலக்ஷ்மியும், சாரதா லேடீஸ் யூனியனின் அங்கத்தினர்களும் அவர்கள் முயற்சிகளுள் மிகவும் பெரிதானதும் இறுதியில் மிகவும் வெற்றிகரமானதாகத் திகழ்ந்ததுமான சாரதா வித்தியாலயத்துக்கான ஆரம்ப ஏற்பாடுகளைக் கவனிக்கத் தொடங்கியிருந்தார்கள். 1927ம் வருஷம் ஜூலை மாதம் முதல் தேதியன்று வித்தியாலயம் திறக்கப்பட்டது.

கடந்த சில ஆண்டுகளாக விதவை இல்லத்துக்கு மனுக்கள் ஏராளமாக வந்து குவிந்தன. அவர்கள் அனைவருக்கும் இல்லத்தில் இடமிருக்கவில்லை. சென்னை அரசாங்கம் இரண்டாவது இல்லம் ஒன்று தொடங்கி வைப்பதற்குப் பதிலாக, விதவைகளுக்கென்று இதுவரை ஒதுக்கி வந்த உபகாரச் சம்பளங்களையே குறைத்து விட்டது. படிப்பிலே நல்ல கெட்டிக்காரப் பெண்களாயிருந்தவர்கள்கூட அவர்கள் பெற்றோர்களிடம் பண வசதி இல்லாத காரணத்தினால், திருப்பி அனுப்பப்பட்டார்கள்.

இப்போது—இந்தியா முழுதும் நிறையப் பள்ளிக்கூடங்கள் தோன்ற வேண்டுமென்றும், அவற்றுக்கு ஆசிரியைகள் அதிகமாகத் தேவையென்றும் மக்கள் விழிப்புணர்ச்சியுடன் எண்ணி வந்த சமயத்தில் புத்திசாலிகளான நல்ல பெண்கள் படித்து முன்னேறவோ சமூகத்துக்குப் பயன்படவோ முடியாமல் போவது பொறுக்கத் தகாததாக இருந்தது.

இவர்களுக்கு ஏதேனும் செய்தாக வேண்டும். அதைச் செய்வதற்கு இதுவே சரியான தருணம். அரசாங்கத்திலிருந்து ஒன்றும் எதிர்பார்க்க முடியாது என்பது தெளிவாயிற்று.

பூனாவிலிருந்து திரும்பிய ஓரிரண்டு மாதங்களுக்குப் பிறகு, சாரதா மாதர் சங்க அங்கத்தினர்களிடம் சகோதரி இப்புதுத் திட்டத்தைக் கூறினாள். அதன்படி அவர்களே சொந்தமாக ஒரு வித்தியாலயம் ஆரம்பிக்க வேண்டும். அதற்கு வேண்டிய பணம் திரட்டுவது அதை நிர்வகிப்பது ஆகிய பொறுப்புக்களை அவர்களே ஏற்றுக் கொள்ள வேண்டும். அதன் முக்கிய லட்சியம், புத்திசாலிகளான ஆனால் பொருளாதார ரீதியில் பிற்போக்காளர்களான பெண்களுக்கும், இளம் மங்கையருக்கும் ஆசிரியைத் தொழிலில் பயிற்சியளிப்பதாய் இருக்க வேண்டும். நான்கே வருஷங்களில் எழுத்து வாசனையே தெரியாத ஒரு பெண்ணை விஷய ஞானமுள்ளவளாக, கற்றறிந்தவளாக, ஆரம்பப் பள்ளிகளில் மேல் வகுப்புக்குப் பாடம் சொல்லித் தரக் கூடிய திறமைசாலியாக மாற்றிவிட முடியும் என்று அனுபவத்தில் கண்டிருந்தாள் சகோதரி. புதிதாகத் தொடங்கவிருக்கும் வித்தியாலயத்தில் படிக்க வருவோரில் பலர் ஒரு திண்ணைப் பள்ளிக்கூடம் கூட இல்லாத ஊர்களிலிருந்து வருபவர்களாயிருக்கலாம். பயிற்சி முடிந்த பிறகு இந்த இளம் ஆசிரியைகள் தங்களுடைய பெற்றோர்கள், மற்றும் நண்பர்களின் உதவியுடன் தாங்களே புதுப் பள்ளிகளைத் தொடங்க முற்படலாம்.

இத்திட்டம் உடனே உற்சாகத்துடன் அங்கீகரிக்கப்பட்டது. சாரதா மாதர் சங்க அங்கத்தினர்கள் கல்விக் கமிட்டி ஒன்றை நியமிக்க ஒப்புக் கொண்டார்கள். வித்தியாலயம் நடத்துவதற்காக மாதம் மூன்று ரூபாய் கொடுக்கும் பெண்கள் அதில் அங்கத்தினர்களாகச் சேர்ந்து கொள்ளலாம் என்று முடிவு செய்தார்கள்.

பணக்கார அங்கத்தினர்கள் தாராளமாகக் கொடுத்தனர். அந்தப் புதிய இல்லத்தைச் சில மாதங்களுக்கேனும் நடத்தக்கூடிய அளவுக்குப் பணம் சேர்ந்தது. திருவல்லிக்கேணியில் சாரதா இல்லத்துக்கு அருகேயே ஒரு வீடு வாடகைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. பன்னிரண்டு பெண்கள் அதில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். ஐந்து பிராமணர்கள் ஆறு பிராமணரல்லாதார். ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவள் ஒருத்தி. இவர்களில் ஆறு பெண்களின் பெற்றோர்கள், தங்கள் பெண்களின் பராமரிப்புக்காகச் சிறிதளவு பணம் கொடுக்க முன்வந்தார்கள். மற்றவர்கள் ஏதும் தர முடியாத ஏழைகள்.

முதலில் ஊதியம் ஏதும் எதிர்பாராமல் ஆசிரியைகள் பணியாற்றினார்கள். சுப்புலக்ஷ்மியும் அவள் தங்கையும் தங்களுக்குக் கிடைத்த நேரத்தை யெல்லாம் வித்தியாலயத்துக்கு உபயோகப்படுத்தினார்கள். கல்வித் துறையில் ஈடுபட்டிருந்த மிகவும் படித்த பெண்மணிகள் – நகரத்தின் பல்வேறு பாகங்களில் போதித்துக் கொண்டிருந்தவர்கள்— இந்த வேலையில் முனைந்து தங்கள் ஓய்வு

# B·I



# S. S. ரஜூலா

## சென்னையிலிருந்து

1966 மே 18 — 1966 ஜூன் 11

சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாருக்கு விண்ணப்பிக்கவும்.

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

**C. M. குட்டி**
புரொப்ரைட்டர்: குட்டி டிராவல் சர்வீஸ்
38, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை-1

**மெஸர்ஸ் கோரனா டிராவல்ஸ்**
மாஸ்காட் ஹோட்டல்
திருவனந்தபுரம்

## நாகப்பட்டினத்திலிருந்து

1966 மே 19 — 1966 ஜூன் 12

நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுக்களை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம்

**மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
முதல் லேன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:

**பின்னி & கம்பெனி லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

**மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**
முதல் லேன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

ஏஜெண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

நேரத்தை யெல்லாம் இந்த வித்தியாலயத்துக் காகத் தியாகம் செய்தனர்.

நன்கொடைகள் வந்து கொண்டே யிருந் தன. அவைகளில் சில, விதவைகள் இல்லத் தின் பழைய மாணவிகள் அனுப்பியவை. தங்களுக்குக் கிடைத்திருக்கும் நல் வாழ்க்கை பிறருக்கும் கிட்ட வேண்டும் என்று விரும்பி உதவி செய்ய எண்ணினார்கள் இவர்கள்.

அந்த ஸ்தாபனம் வேகமாக வளர்ந்தது. முதல் வருடத்தின் இறுதியில் சாரதா இல்லத் தில் உள்ள மாணவிகளும் வித்தியாலயத்தி லேயே வசிக்க ஆரம்பித்தனர். அதனால் மாணவிகளின் எண்ணிக்கை நூறுக்கும் அதிகமாகி விட்டது.

டில்லி சட்டசபையில் கொண்டுவரப்பட்ட இரு மசோதாக்களின் முடிவு இன்னும் தெரிய வரவில்லை. நிச்சயமற்ற நிலையே நீடித்தது. சீர்திருத்தவாதிகள் பொறுமை இழந்தனர். மசோதாக்களை எதிர்த்தவர் களோ அச்சமுற்றனர், சிலர் எய்தினர், கூக் குரலிட்டனர். இரு தரப்பாலும் தாக்கப்பட்ட அரசாங்கம், தான் ஏதோ ஒருவிதத்தில் செயல்பட்டே ஆகவேண்டும் எனக் கண்டது.

1928ம் ஆண்டு ஜூன் மாதம் அது ஒரு கமிட்டியை நியமித்தது.

'சம்மத வயதுக் கமிட்டி' என்று அதிகார பூர்வமாகப் பெயர் பெற்ற அதற்கு ஐக்கிய மாகாணத்தின் உள்நாட்டு அங்கத்தினராகப் பணியாற்றிய சர் மோரோபந்த் விசுவநாத் ஜோஷி என்பவர் தலைமை வகித்தார். ஓர் ஆங்கிலேய லேடி டாக்டரைத் தவிர அவ ருடன் சேவை புரிந்தவர்கள் அனைவரும் இந்தியர்களே. இருவர் நீதிபதிகள்; நால்வர் பெயர்பெற்ற வழக்கறிஞர்கள்; ஒருத்தி மிக்க அனுபவசாலியான * ஸ்ரீமதி ராமேசுவரி நேரு.

கமிட்டியிலிருந்த அனைவரும் திறமை சாலிகள்; உற்சாகம் மிகுந்தவர்கள். அவர்கள் மேற்கொண்ட வேலை முடிய ஒரு வருடத்துக்கு மேல் ஆயிற்று. தங்கள் பணியை அவர்கள் நிறம்படச் செம்மையாய்ச் செய்தனர். இந்தி யாவின் ஒவ்வொரு பகுதிக்கும் சென்று சுமார் நானூறு முக்கியஸ்தர்களை நேரில் கண்டு பேசினார்கள். பிரயாணத்திலேயே பல மாதங்கள் கழிந்தன. 1928ம் வருஷம் நவம் பர் மாதம் அவர்கள் சென்னையை அடைந் தார்கள். இன்று அவர்கள் சேமித்த சாட்சி யங்களே ஐந்நூறு பக்கங்களுக்கு மேல் நிரம் பின, அதுவும் மிகச் சிறிய அச்சில்!

சகோதரி சுப்புலட்சுமியின் சாட்சியம் மிக வும் முக்கியமாக இருந்தது. இளம் பிராயக் கல்யாணங்களைத் தடுப்பதற்கு நம்பகமான நல்ல வழி பெண் கல்வியை மேலும் பரவச் செய்வதுதான் என்பது அவளுடைய வலுவான அனுபவபூர்வமான நம்பிக்கை. கமிட்டியின் முன் சாட்சி கூறவிருந்த தினத்துக்கு முதல் நாள் கூட ஒருவர் பன்னிரண்டு, பதின்மூன்று வயதுடைய தமது இரு பெண்களை அவளிடம் அழைத்து வந்திருந்தார். அவர் சகோதரி அப் பெண்களை வித்தியாலயத்தில் சேர்த்துக்

* நேருவின் இளைய மருமகள்.



## பேசாத பைங்கிளி!

### (சிங்காரத்தின் சாகசங்கள்)

1. நிர்மலாவின் டப்பாப் பையில் இருந்த, வீணை வாசிப்போர் விரல்களில் அணியும் புளி நகக் குப்பிகள் நான்கும் அவள் வீணை வாசிப்பவள் என்பதைத் தெரிவித்தன. ஆனால் அவள் உடையும் அலங்காரமுமோ அவளை அதற்கு ஏற்றவளாக்கவில்லை. சிங் காரத்தின் உன்னிப்பான பார்வை அவள் காதோரத்தில் இருந்த ரோஸ் நிற மேக்கப்பைக் கவனித்து விட்டது. பெயர் விலாசம் கொடுக்க மறுத்த அவள் திருட் டுத்தனமாக நடிக்கச் சென்றிருக்கிறாள் என்பதை ஊகிக்க வைத்தது. சின்ன ஊரான மஞ்சிக்குடியில் வீணைப் பயிற்சி பெறுபவர் யார் என்பதை அறிவது அவ்வூர் போலீஸாருக்கும் பெரிய காரிய மில்லை. தகப்பனார் பெண்ணை வீணைப் பயிற்சிக்குச் சென்னைக்கு அனுப்ப, அவளோ அவருக்குத் தெரியாமல் சினிமா வில் நடிக்கும் ஆசையோடு அலைகிறாள் என்பதைச் சிங்காரம் ஊகித்துவிட்டான்.

2. சண்முகத்தின் 'மண்டிக்குப்' பின்னால் இருந்த 'மௌனாவிக்' சிப்பல் குவியல்; திருட்டுப் போன காரின் கன்ட்ரோல் பெட்டிகளில் இருந்த சேற்றிலிருந்த சரளை களின் கதையைக் கூற; சண்முகத்துக்கும் கார் திருட்டுக்கும் தொடர்பிருக்கிறது என்பதைக் கண்டுபிடிக்கிறான்.

3. 'காகிதத்திலான 'ஸ்ட்ரா' பாக்கெட்டு அடங்கிய பார்சல்களைத் தூக்குவதற்கு இரண்டு பேரா?' என்ற வினா, அதனுள் வேறு ஏதோ பொருள் இருப்பதைக் கூறி விடுகிறது. பால் பவுடர் கடத்தலும் அம்பலமாகிறது. 'கௌரவமானவர்கள்' என்ற போர்வை போர்த்திக்கொண்டு கள்ளக் கடத்தலில் ஈடுபட்டு வந்த பெரிய மனிதர்கள் வளைக்கப்படுகிறார்கள் சிங்காரத்தின் திறமையினால்.



கொள்வதானால் அவர்களுடைய இரு மணத்தை ஐந்தாறு வருடங்களுக்கு ஒத்திப் போடத் தயாராக இருந்தார். அவர்களுக் குத் தகுந்த வரனைத் தேடுவது சிரமமாக இருக்காது. பின்னவளைப் பெற்றவர்கள் இப்போதெல்லாம் படித்த மனைவி ஒரு தொல்லையல்ல, ஒரு பொக்கிஷம் என்பதை உணர ஆரம்பித்து விட்டிருந்தார்கள்.

பெண்களுக்குப் பதினாறு வயதுக்கு முன் கல்யாணம் செய்யக் கூடாது என்று சட்டம்

வரவேண்டும் என்று சகோதரி வலியுறுத்தினாள். ''என்னைப் பொறுத்த வரையில், கல்வி போதனையினாலும், பிரசாரத்தினாலும்தான் சமூகம் சீர்திருந்துகிறது என்று பூரணமாக நம்புகிறேன். ஆனாலும், மக்களுடைய நன்மைக்காகச் சட்டங்களும், இன்றியமையாதவை. அவசியமானபோது சட்டமியற்றவும் வேண்டியதுதான். ''இச்சட்டங்கள் மிகவும் அநியாயமானவை என்று மக்கள் இப்போது கருதினாலும், காலப் போக்கில், கல்வி பரவப் பரவ, அதுவும் முக்கியமாகப் பெண் கல்வியில் முன்னேற்றம் காணக் காண அவர்களுக்கு இச்சட்டங்களைப் பாராட்டவும் தோன்றிவிடும்'' என்று சகோதரி, தொடர்ந்து தனது சாட்சியத்தில் எழுதியிருந்தாள்.

கமிட்டியின் அங்கத்தினர்களைச் சந்தித்த போது எந்தக் காரணத்தை யொட்டியும் இளம் பிராய விவாகங்கள் ஏற்கத் தகுந்தனவாகவோ, மன்னிக்கத் தகுந்தனவாகவோ இல்லை என்று கூறினாள் சகோதரி.

குழந்தை விவாகங்களினால் ஏற்படும் நிலைமைகளை அவள் அவர்களுக்கு விரிவாக எடுத்துரைத்தாள். சிறு பிராயத்திலேயே அடுத்தடுத்துக் குழந்தைகள் பிறப்பதால் பெண்களின் ஆரோக்கியம் சீர்கேடடைவது; குறைப் பிரசவங்கள் பல ஏற்படுவது; பிரசவம் பற்றிய பயத்தாலேயே சிறுமிகளான தாய்மார்களுக்கு மூளைக் கோளாறு ஏற்பட்டு விடுவது போன்ற பல கொடுமைகளை விவரித்தாள். மேலும் படிப்பறிவில்லாத சிறுமிகள் புக்ககத்தில் அடிமைகள் போல நடத்தப்பட்டனர்.

கமிட்டியின் அக்கிராசனர் கேட்டார் : ''நீங்கள் பிரும்மஞான சபையைச் சேர்ந்தவரா?''

''இல்லை.''

அவள் பிரும்மஞான சபையைச் சேர்ந்தவளாக இருக்க முடியாது என்பது சர் மோரோபந்த் ஜோஷிக்கே தெரிந்த விஷயம்தான். ஆனாலும்கூட அக்கேள்வியைக் கேட்டுப் பதிலையும் அதிகாரபூர்வமாகக் குறித்துக் கொள்ள வேண்டியது அவசியமாக இருந்தது. சகோதரி சுப்புலக்ஷ்மியைப் போல வெளிப்படையாக இளம் பிராய விவாகத்தை எதிர்த்துப் பேசியவர்கள் ஒன்று தீவிர சீர்திருத்தவாதிகள் அல்லது பிரும்மஞான சபையினர்; இல்லாவிட்டால் பைத்தியக்காரர்கள் என்று அவர்களது எதிரிகள் அடிக்கடி கூறி வந்தனர்.

''நீங்கள் எப்போதாவது சீர்திருத்தவாதி என்று உங்களைக் குறிப்பிட்டுக் கொண்டதுண்டா?'' சர் மோரோபந்த் ஜோஷி விடாமல் கேட்டார்.

''இல்லை.''

தங்கள் அறிக்கையைச் சமர்ப்பிக்க வேண்டிய சமயம் வரும் போது, சம்பிரதாயப் பழக்கவழக்கங்களை அனுசரிக்கும் இந்துக்களும்கூட இந்தச் சீர்திருத்தத்தில் விருப்பம் கொண்டிருந்தார்கள் என்பதைக் கமிட்டியினர் எடுத்துக் காட்ட வேண்டியது முக்கியமாகும்.

''விதவை இல்லத்தில் ஓரளவு ஆசாரம் கடைப்பிடிக்கப்படுகிறது என்று நான் கொள்ளலாம் அல்லவா?'' என்று ஸ்ரீ ஏ. ராமசாமி முதலியார் கேட்டார். ''நீங்கள் சீர்திருத்தவாதியுமல்ல, பிரும்ம ஞான சபையைச் சேர்ந்தவருமல்ல.. வைதிக ஆசாரத்தைக் கடைப்பிடிப்போரில் ஒருவர் என்று உங்களை நான் கொள்ளலாமா?''

''நான் வைதிக ஆசாரத்தைக் கடைப்பிடித்துத்தான் வருகிறேன்.'' சகோதரி ஒப்புக் கொண்டாள். எனினும் வைதிக ஆசாரத்தைப் பற்றிய அவளுடைய கொள்கைகள் மாற ஆரம்பித்து விட்டிருந்தன. ''ஆனால் நாங்கள் சமபந்தி போஜனமும் செய்வது மட்டுமல்ல, கலப்பு மணங்களுக்கும் ஆதரவு அளிக்கிறோம்.''

இருந்தாலும், வைதிக ஆசாரத்தில் பற்றுள்ளவள் என்பதினால் கமிட்டியின் அங்கத்தினர்களுக்கு அவள் ஒரு முக்கியமான சாட்சியாகத் தோன்றினாள். தன்னுடைய அபிப்பிராயங்கள் தன்னுடைய அநுபவங்களினால் உருவானவை என்பது மட்டுமல்ல; தன் மதத்தின் அடிப்படைக் 'கொள்கைகள் என்று தான் நம்பியவற்றை யொட்டியும் இருந்தன என்று அவள் தெளிவாகத் தன் குறிப்பில் எழுதியிருந்தாள். ''இந்து மதத்தின் கொள்கைப்படி கல்யாணமும், சாந்திக் கல்யாணமும் உடல் நன்கு வளர்ச்சி பெற்ற பிறகுதான் நிகழ வேண்டும். ஆசிரம தர்மத்தின்படி, படிக்கும் காலத்தில் ஒவ்வொரு பெண்ணும், பிள்ளையும் பிரும்மசரியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். இந்து மதம் மட்டும் முறைப்படி பின்பற்றப்பட்டால் ஒவ்வொரு கல்யாணமும் ஒரு லட்சியத் திருமணமாக, திருப்திகரமாக நிகழும். இப்பொழுதுள்ள கஷ்டங்களெல்லாம் நம் பண்டைய நூல்களில் விதித்துள்ளபடி நாம் நடந்து கொள்ளாததன் விளைவுகள்தாம்.''

இந்த அபிப்பிராயத்தில் தான் தனித்து நிற்க வில்லை என்பதையும் அவள் குறிப்பிட்டாள். தன்னுடைய கொள்கைக்கு ஆதாரமாகப் பல பெரியோர்களின் கருத்துக்களை எடுத்துக் காட்டினாள்.

புத்த மந்திரி சபையின் அங்கத்தினராக இருந்ததுமல்லாமல், மெத்தப் படித்தவர் என்று பலராலும் கருதப்பட்டவர் மகாகனம் ஸ்ரீநிவாச சாஸ்திரியார். அவர், இளம் பெண்களும் ஆண்களும் நீண்ட காலம் மாணவ வாழ்க்கை நடத்திய பிறகே மண வாழ்க்கையை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்கு ஆதாரமாகப் பல பெரியோர்களின் கருத்துக்களைச் சேகரித்து வைத்திருந்தார்.

ஜூனகட் சமஸ்தானத்தின் பிரதம நீதிபதியாளரும் கமிட்டியின் முஸ்லிம் அங்கத்தினருமான கான்பகதூர் மஹ்பூப் மியான் இமாம் பக்ஷ் காதிரி, ''இந்து மதக் கொள்கைப்படி பெண்கள் இருபத்தைந்து வயது வரை மணமாகாமல் இருக்க வேண்டும் என்று கூறுகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''அதுதான் ஆதர்ச நிலை'' என்று திடமாகச் சகோதரி பதிலளித்தாள். (தொடரும்)

# ஸிங்கர்*

## நம்பகத்தன்மை

## ஒவ்வொரு மெர்ரிட்* மின்விசிறியிலும்

ஆயுட்கால ஸிங்கர் சேவையின்
பக்கபலம் கொண்டது

...எந்தவகை மின்விசிறியும் சிறந்த
குளுமையைத் தருகிறது

ஸிங்கர், [illegible] மெர்ரிட் மின்விசிறிகளின் பல ரகங்களை அளிக்கிறது—அழகான, ஒரு சீரான (ஸ்ட்ரீம்லைண்ட்) மாடல்கள், [illegible] [illegible] தயாரிக்கப்பட்டவை.

உங்கள் அருகாமையிலிருக்கும் ஸிங்கர் கடையிலோ, அங்கீகாரம் பெற்ற ஸிங்கர் வியாபாரியிடமோ கிடைக்கும்.

பெயரில் மெர்ரிட், புகழில் ஸிங்கர்






*ஸிங்கர் கம்பெனியின் டிரேட் மார்க்



படிக்கப் படிக்கப் பிரபாகருக்கு உடல் முழுதும் புல்லரித்தது.

"நீங்கள் இளமை, அழகு, துறுதுறுப்பு நிறைந்த இளைஞரா? முப்பதுக்கு உட்பட்ட வயதுடையவரா? கட்டாயம் மணமாகியிருக்கக்கூடாது! அளவுக்கு மீறிய பொறுமை, நிதானம் உங்களுடைய தனிக் குணங்களா? சளசளவென்று பேசும் திறமை உங்களுக்கு உண்டா? பட்டம் படிப்பு பற்றிக் கவலை வேண்டாம். படாடோபமான வாழ்க்கையில் பற்றுதல் வேண்டும்!

"மேற்கூறிய இலட்சணங்கள் பொருந்திய வாலிபர்களுக்கு அரியதொரு சந்தர்ப்பம்.

"அமெரிக்க ஸ்தாபனம் ஒன்று இந்தியாவில் தொடங்கவிருக்கும் கம்பெனிக்கு மானேஜர் ஒருவர் உடனடியாகத் தேவை. சம்பளம் மாதம் ரூ. 1500. தகுதியுள்ளவர்கள் பிப்ரவரி மாதம் 12ந் தேதி காலை 11 மணிக்கு நேரில் வந்து விண்ணப்பிக்கவும். போட்டியின் மூலமே தேர்வு நடத்தப்படும்.

333, சுயம்வரத் தெரு, அதிசயபுரம்"

'விந்தையும் விநோதமும்' என்ற அமெரிக்கப் பத்திரிகையில் வந்திருந்த அந்த விளம்பரமும் விந்தையும், விநோதமும் மிகுந்திருந்தது.

பற்பல தினசரித் தாள்களைப் பல பேரிடமிருந்து கடன் வாங்கி, அவைகளில் வெளிவந்துள்ள விளம்பரங்களைக் குறிப்பெடுத்து, விண்ணப்பத்துக்கு மேல் விண்ணப்பமாகச் சரமழை பொழிவது ஒன்றுதான் பிரபாகர் கொண்டிருந்த ஒரே வேலை. அப்பப்பா! அவன் ஏறி இறங்காத அலுவலகமும் இல்லை! கண்டு பேசாத அதிகாரிகளும் இல்லை! அவனுக்கு இல்லாதது அதிருஷ்டம்! மீதியாக இருந்தது ஏமாற்றம்!!

பெற்றோர்களை இளம் வயதிலேயே பறிகொடுத்த பிரபாகர் பேரெழில் மிகுந்த இளைஞன். கண்களைப்



பறிக்கும் வெண் வெப்பு நிறமேனி. நவராத்திரிப் பொம்மை போல் தளதளவென்று அளந்து பொருந்திய தேகம். கவர்ச்சி பொருந்திய முகம். சௌந்தரியம் என்கிற விஷயத்தில் அளவுக்கு மீறிய செல்வத்தை அவனுக்கு வழங்கிய தெய்வம், பொருளில் சிக்கனப்படுத்தி விட்டதால் அவன் ஓர் அனாதை. அனாதையானவன் அரட்டை மிருந்தவனாகவும் இருந்து தொலைத்தது அவனுடைய துரதிருஷ்டம்தான். தாய் மாமன் அரவணைப்பில் வளர்ந்தது அவனுடைய வயது மட்டுமல்ல, துடுக்குத்தனமும், விளையாட்டுப் புத்தியும், அரட்டைக் குணமும் படிப்படியாக வயதுக்கு மீறி வளர்ந்தன. எப்படியோ பள்ளிப் பருவத்தைத் தாண்டிக் கல்லூரியிலும் அடியெடுத்து வைத்துவிட்டான் அவன். அதற்கு மேல் அத்தேரை வடம் போட்டு நிலைவரையில் இழுக்கச் சக்தியற்றுப் போன அவனுடைய மாமா, நடுத்தெருவில் அவனைத் தவிக்க விட்டு, கையை உதறிக் கொண்டார். அதன் விளைவாகப் பிரபாகர் நடைபாதைப் பிரஜையானான்.

படிப்பை ஒழித்துக் கட்ட முடிந்ததே தவிர வயிற்றைக் காயப்போட முடியவில்லை அவனால். வயிற்றுப் பாட்டுக்காக வேட்டையாட

இத்துடன் விட்டு விட்டார்கள் போதும்! அமெரிக்காவாக இருந்திருந்தால் எவ்வளவு முறை விவாகரத்து ஆகியிருந்தாலும் பரவாயில்லை என்று விளம்பரத்தில் ஒருவேளை சேர்த்திருப்பார்கள்! எனக்குத்தான் இன்னும் மணமாகவில்லையே!

"பொறுமையும், நிதானமும் தேவை! இவ்வளவு கஷ்டத்திலும் நான் உயிருடன் இருக்கிறேனே! என் பொறுமைக்கும் நிதானத்துக்கும் வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

"சளசளவென்று பேச வேண்டுமாம்! அது என்னுடன் பிறந்த குணம். பேசுவதற்குச் சந்தர்ப்பம் இல்லாத வேலைகளில் வகுப்பறையில் அரட்டை அடித்து அடித்து, பல முறை வெளியேற்றப் பட்டிருக்கிறேன். கருத்து இருக்கோ, இல்லையோ பேசுவதற்கு என்னை மிஞ்ச யாராலும் முடியாது."

"பட்டம், படிப்புத் தேவையில்லை! படிப்பு எனக்குத் துளிக் கூட இல்லை. பட்டம் என்றால்

# என்னதான் முடிவு?

ஆரம்பித்தான். அதற்கான மோப்பத்தைப் பத்திரிகைகள் வேண்டிய மட்டும் அளித்தன. சலசலப்புத்தான் மிகுதியாக இருந்ததே தவிர தேடிய இரை எங்கும் கிடைக்கவில்லை.

'விந்தையும் விநோதமும்' இணைசித் தாளைப் பிரித்து, மீண்டும் மீண்டும் அந்த விளம்பரத்தை வாசித்தான். வாசிக்க வாசிக்க நம்பிக்கை பிறந்தது.

கண்ணாடி முன் நின்றுகொண்டு தன் எழிலுருவத்தை ஒரு முறை ஏற இறங்க அளந்து பார்த்தான் பிரபாகர்.

"என் அழகைப் பற்றிச் சந்தேகமேயில்லை! கவி பாடலாம். வேலை கெட்டுப்போனா கல்லூரியில் சக மாணவிகள் வண்டு பூவை மொய்ப்பது போல் என்னைச் சுற்றிச் சுற்றி ரீங்காரம் செய்தார்கள்! கிடைத்தற்கரிய அச்சந்தர்ப்பங்களை வெட்கம் மிகுதியால் நழுவ விட்டதால்தானே இப்போது 'தனிக் கிணதோம்' போட நேர்ந்துவிட்டது!

"வயது முப்பதுக்கு உட்பட்டிருக்க வேண்டுமாம்! எனக்கு இருபத்துநான்கு ஆகிறது. இந்தக் கம்பெனியே தொடர்ந்து விளம்பரப்படுத்த நேரிட்டால் நான் இன்னும் ஐந்து ஆண்டுகளுக்கு விண்ணப்பித்துக் கொண்டே இருக்கலாம்.

"மணமாகியிருக்கக் கூடாதாம்! இது இந்தியாவாக இருப்பதால்

ரேவதி



கஸ்தூரிப் பட்டங்கள் போலிருக்கிறது. மற்றப் பட்டங்கள் எனக்கு அலமாரி கொள்ளாமல் இருக்கின்றன. ஒருவேளை இந்தக் கம்பெனிக்கு அவைகள்தான் தேவைப்படுமோ?''

''ஆஹா! என்ன பொருத்தம்! விளம்பரத்தைப் படிக்கப் படிக்க என்னையே மனத்தில் வைத்துக் கொண்டு வரையப்பட்டது போல் அல்லவா தோன்றுகிறது?

''சற்று யோசித்துப் பார்த்தால் அவர்களுக்குத் தேவைப்படுவது மானேஜரா, மாப்பிள்ளையா என்று குழப்பம் ஏற்படும் போல் இருக்கிறது. மாப்பிள்ளைக்கு வேண்டிய இருக்கல்யாணக் குணங்களைத்தான் அவர்கள் விண்ணப்பதாரர்களிடம் எதிர்பார்க்கிறார்களோ! அதனாலென்ன? மாப்பிள்ளைப் பணியாற்றி விட்டால் போகிறது!

''சம்பளம் மாதம் 1500! வருஷத்துக்கல்ல! இது போதும். அதிகப்படி வேண்டாம். அப்புறம் வருமான வரி கொடுத்துத் தீராது.

''அமெரிக்கக் கம்பெனி! ஒருகால் பயிற்சிக்காக அமெரிக்காவுக்கு என்னை அனுப்பினாலும் அனுப்பலாம்! ஆகா! எத்தகைய வாய்ப்பு! இதை நழுவ விடக் கூடாது!''

பிரபாகரின் நினைவலைகள் சுழன்றன. தனக்கு எப்படியும் இந்த வேலை கிடைத்துவிடும் என்று அவன் திடமாக நம்பினான். விளம்பரம் கொடுத்த கம்பெனியின் பெயரென்ன, அவர்கள் என்ன வியாபாரம் செய்கிறார்கள் போன்ற முக்கியமான விவரங்களைப் பற்றி அறிந்துகொள்ள அவன் கவலைப்படவில்லை.

பிப்ரவரி 12ந் தேதி வரத்தான் செய்தது. அன்று அதிசயபுரத்தில் உள்ள 333, கயம் வரத்தெருவில் பிரபாகர் ஆஜராகியிருந்தான் என்று சொல்லத் தேவையில்லை.

மானேஜர் பதவி கிட்ட வேண்டுமானால் அழகு, இளமை, குறுகுறுப்பு, இவை தேவையாதலால் மற்றவர்களை இப்போது கூர்ந்து கவனித்தான்; அவர்களிடம் எல்லா இலட்சணங்களும் பொருந்தி யிருக்கின்றனவா என்று எடை போட.

ஒருவனுக்குக் குடை மிளகாய் மாதிரி மூக்கு. ஒருவனுக்குப் பர்ஸ் மாதிரி வாய். ஒருவனுக்கு ஆந்தைக் கண். ஒருவனுக்கு அலிபாபா குகை போல் நாசித் துவாரம்; ஒருவனுக்குக் கழுதைக் காது; மற்றொருவனுக்குத் தேங்காய் மண்டை. இப்படியாக ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு குறையை அவன் கண்டான்.

மணி சரியாகப் பதினொன்று அடித்து ஓய்ந்ததோ இல்லையோ தேர்வுக்கான பேட்டி ஆரம்பமாகியது. பேட்டிக்காக ஒவ்வொருவராக அழைக்கப்பட்டனர். கம்பெனி பிரத்தியேகமாக அமைத்திருந்த முறையில் ஏற்கனவே பேட்டி காணப் பட்டவர்கள் மற்றவர்களுடன் தொடர்பு கொள்ள முடியாதபடி ஆகிவிட்டது. யாருக்கும் ஐந்து நிமிஷங்களுக்குமேல் பேட்டிக்காக நேரம் செலவழிக்கப்படவில்லை என்று பிரபாகர் கணித்தான். அது அவனுக்குத் திருப்தி அளித்தது.

எதிலும் கடைசியாகவே விருந்து பழக்கப்பட்டுப் போன பிரபாகருக்கு இந்தத் தடவையும் தன்னுடைய பெயர் கடைசியாக அழைக்கப்பட்டதில் அவன் தனி மகிழ்ச்சி கொண்டான்.

பேட்டி அறைக்குள் நுழைந்ததும், பளபளப்பான மேஜையைச் சுற்றி உட்கார்ந்து கொண்டிருந்த நால்வரையும் பார்த்து 'வணக்கம்' என்று கூறினான்.

அவர்களும் பதிலுக்கு வணக்கம் என்று கூறினர். இது அவனுக்குப் புதிய அனுபவம். காலியாக இருந்த நாற்காலியைக் காட்டி அதில் அவனை அமரச் சொன்னார்கள்.

''நன்றி'' என்று கூறிக் கொண்டு பணிவுடன் ஆசனத்தில் அமர்ந்தான்.

அவனையே சில விநாடிகள் கண் கொட்டாமல் அந்த நால்வரும் பார்த்தனர். பிரபாகர் முகத்தில் எவ்வித சலனத்தையும் காட்டிக் கொள்ளவில்லை.

சற்றுத் தள்ளி, ஓரத்தில் டைபிஸ்டுபோலத் தோற்றமளித்த ஒருத்தி உட்கார்ந்திருப்பதை அவன் அப்போதுதான் கண்டான். இதயத்தில் சங்கடம் பிழிந்தெடுக்க, எப்படியோ தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான்.

தொடர்ந்து அவர்கள் அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது ஒரு புறம் சங்கடமாகவும்மறுபுறம்பெருமையாகவும் இருந்தது. ஆனால் பெண்ணினம் சமைந்திருந்த அந்தத் திக்கில் திரும்பிக்கூட பார்க்கவில்லை. 'பெண்ணைக் கண்டால் இளிக்கும் சுபாவம் உள்ளவர் என்று எங்கு தன்னைக் கழித்துவிடுவார்களோ?' என்று பயம். பெண்ணிடம் எப்படிப் பழகுகிறான் என்று சோதனை செய்யத்தான் இந்த உபாயமோ? பிரபாகரின் மனம் குழம்பியது.

அழகு மட்டும் இருந்தால் போதாது, சளசளவென்று பேசவும் தெரிய வேண்டும் என்று விளம்பரத்தில் படித்திருந்தது சட்டென்று ஞாபகம் வரவே, ''புறம்தான் இப்படி என்று எண்ணி விடாதீர்கள். அகமும் இப்படித்தான்'' என்று வார்த்தைகளைத் திடீரென்று உதிர்த்தான்.

அந்த நால்வருக்கும் தூக்கி வாரிப்போட்டது. ஆயினும் அர்த்தத்துடன் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

''அப்படியா? மிக்க சந்தோஷம்... உங்களுடைய பெயர்?''என்றார் அவர்களில் ஒருவர். அப்படிக் கேட்கத் தொடங்கும் முன்பே, அதற்காகவே காத்திருந்தவன் போல்,—

''என்பெயர் கு. பிரபாகர். அதாவது கும்பம் பிரபாகர்'' என்று பளிச்சென்று எடுத்துரைத்தான். அவன் அத்துடன் நிற்கவில்லை.

- '' 'கு' என்பது கும்பம் என்கிற என் முதற் பெயருக்கு முதலெழுத்து. எங்கள் பக்கத்தில் சாதாரணமாகத் தன் தகப்பனார் பெயரைத்தான் முதற் பெயராகக் கொள்வார்கள். ஆனால் நாங்களோ தலைமுறை தலைமுறையாகக் 'கும்பம்' என்கிற குடிப் பெயரைத்தான் முதற்பெயராகக் கொண்டிருக்கிறோம். ஆனால் 'கும்பம்' என்கிற என் முதற் பெயருக்கும் கும்பகோணத்துக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை!''

நால்வரும் கலுக்கென்று சிரித்தார்கள். தூரத்திலிருந்து மற்றொரு இலேசான சிரிப்பொலியும் வீணை கானம் போல் எழுந்தது.

''உங்களுடைய வயது...?''

''என்னுடைய வயது இன்றைக்குச் சரியாக இருபத்து நாலு வருஷம், மூன்று மாதம் பத்து நாட்கள். எஸ். எஸ். எல். ஸி. புத்தகத்

## உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும் பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

### நடுவில் நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!

**பிரில்க்ரீம் மட்டுமே**

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது சுத்தமாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, சேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தையும் பாதுகாக்கிறது.




**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலக முழுவதிலும் லட்சக்கணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

தில் உள்ள என் பிறந்த தேதி. நான் அசலாகப் பிறந்த தேதியேதான்.''

இப்போது நால்வரும் 'கலகல'வென்று சிரித்தார்கள். 'களுக்'கென்று தூரத்துச் சிரிப்பொலி சதங்கை யொலி மாதிரி சில விநாடிகள் தொடர்ந்து கேட்டது.

''நீங்கள் இப்போது என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?''

''உங்களுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருக்கிறேன்.''

சிரிப்பொலி பெரிதாக எழுந்தது.

''சிரிக்கச் சிரிக்கப் பேசுகிறீர்களே!'' என்று நால்வரில் ஒருவர் கூற, மற்றவர்கள் அதை ஆமோதிக்க, பிரபாகர் ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்தான்.

''நீங்கள் இந்த வேலைக்கு விண்ணப்பிக்கக் காரணம்?''

''உங்களுடைய விளம்பரம்! நீங்கள் படிப்பைப் பற்றிக் கவலைப்படவில்லை. நானும் கவலைப்படவில்லை! நீங்கள் எதிர்பார்க்கும் அவ்வளவு குணங்களும் எனக்குப் பொருந்தியிருக்கவே, விண்ணப்பித்தேன்.''

''உங்களுக்குப் பிடித்த விளையாட்டு எது?''

''பள்ளியில் புட்பால். நான்தான் சென்டர் பார்வர்டு! கல்லூரியில் கிரிக்கெட். இப்பொழுது பில்லியார்ட்சும், கோல்பும் விளையாடுகிறேன்.'' துணிந்து சரடு விட்டான் பிரபாகர்.

''நீங்கள் சினிமாப் பார்ப்பதுண்டா?''

''நன்றாகக் கேட்டீர்கள்! இதுவரை தொடர்ந்து ஒரு வாரம்கூடச் சினிமாப் பார்க்காமல் இருந்ததில்லை. கவர்ச்சிக்காக இல்லை! கலைக்காக! நான் இதுவரை 996 சினிமாக்கள் பார்த்தாகி விட்டது.''

''நீங்கள் ஏறி வந்த மெத்தைப் படிக்கட்டுகள் எத்தனை?''

''இருபத்தியொன்று! படிக்கட்டு கட்டிய விதத்தை அப்போதே உற்றுக் கவனித்தேன். சரியில்லை! இருபத்தியொன்றுக்குப் பதிலாக இருபத்தி நாலாக அதிகமாக்கி, ஒவ்வொரு படிக்கட்டின் உயரத்தையும் குறைத்திருந்தால் வயோதிகர்களுக்குச் சௌகரியமாக இருக்கும்.''

இப்படியே பேட்டி நடந்துகொண்டிருந்தது. பதினைந்து நிமிஷங்கள் ஆனதும் ஒருவாறு பேட்டி முடிந்தது.

பேட்டி முடிந்ததும், நால்வரும் எழுந்து பிரபாகரின் கையைக் குலுக்கினர்.

அவர்களில் ஒருவர் பிரபாகரைப் பார்த்து, ''உங்களுடைய சாமர்த்தியமான சிரிப்புப் பேச்சு எங்களை மிகவும் கவர்ந்திருக்கிறது. உங்களுக்கு நல்ல வருங்காலம் இருக்கிறது. நீங்கள் இப்போது நமது டைப்பிஸ்ட் பிரமீளாவுடன் அவளுடைய அறைக்குச் செல்வீர்கள்'' என்று கூறினர்.

''மிக்க நன்றி'' என்று சொல்லிவிட்டுப் பிரமீளாவைத் தொடர்ந்தான்.

தனது அறையை அடைந்ததும் தனது ஆசனத்தில் அமர்ந்து கொண்டு அவள் எதையோ தேடிக் கொண்டிருந்தாள். அவளுடைய அறையில் பிரபாகரும், பிரமீளாவும் தான்! மற்ற யாரும் இல்லை!

### பார் பார்!

பண்டிகைக்குப் புத்தாடைகள் எடுத்து வந்த கணவன், மனைவியைப் பார்த்துப் பெருமிதத்துடன் சொன்னான்: ''இதோ பார் உனக்குக் காஞ்சிபுரம் பட்டுச் சேலை; அம்மாவுக்குச் சின்னாளப்பட்டு சேலை; உன் அப்பாவுக்கு 'பின்னி' வேஷ்டி; உன் தங்கைக்கு வாயில் சேலை; எனக்கு ஒரு கைக்குட்டை!'' —எம்.எம்.கே

பிரபாகருக்கு மிகச் சங்கடமாக இருந்தது. பிரமீளாவைப் பார்க்காமலே இருக்க அவன் எடுத்துக் கொண்ட முயற்சிகள் அப்பப்பா! அவளைப் பார்க்காமல் இருக்கக் கடிகாரத்தையும் மின் விசிறியையும் மாறி மாறிப் பார்த்தான். காலண்டரைப் பிரித்து அதில் கவனம் செலுத்தினான்.

கடைசியாகப் பிரமீளா ஏதோ ஒரு தாளைக் காண்பிக்க, அதை ஒரே மூச்சில் படித்து முடித்துவிட்டு, உடனடியாகக் கையெழுத்தும் போட்டுவிட்டு, விர்ரென்று வெளிக் கிளம்பினான். பிரபாகர் பிரமீளாவுடன் தவறிக்கூட ஒரு வார்த்தையும் பேசி விடவில்லை.

பேட்டி முடிந்த மறு நாளே அவனுக்கு ஒரு கடிதம் காத்திருந்தது. வந்திருந்த கடிதத்தை ஆவலுடன் பிரித்துப் படித்தான்.

''அன்பு மிக்க பிரபாகருக்கு,

பெண்களின் அழகுச் சாதனங்களில் திடீர் திடீரென்று மாற்றங்களைப் புகுத்தி அமெரிக்காவில் வெற்றியடைந்த எங்களுடைய கம்பெனி, இந்தியாவில் ஒரு கிளையை உருவாக்க முடிவு செய்தது. அதன் விளைவாகத்தான் 'விந்தையும் விநோதமும்' என்ற பத்திரிகையில் எங்களுடைய விளம்பரத்தை நீங்கள் காண நேரிட்டது.

உங்களுடைய முகத் தோற்றத்தின் அழகும் குறுகுறுப்பும், இளமையும் எங்களைக் கவர்ந்தன. சளசளவென்று நீங்கள் வேடிக்கையாகப் பேசியது எங்களுக்குத் திருப்தியை அளித்தது. ஆனால் நாங்கள் உங்களிடம் மிகவும் அதிகமாக எதிர்பார்த்தது, விளம்பரத்தில் வேண்டுமென்றே தவிர்த்தது வேறொன்று! அதுதான் பெண்ணைக் கவரும் சக்தி. நாங்கள் ஈடுபடும் தொழிலோ முழுக்க முழுக்கப் பெண்களைப் பற்றியது! அவர்களுடைய தேவைகளைப் புரிந்து கொண்டு அவர்களுடைய மனப்போக்குக்குச் சரியாகப் பிரதி தினமும் புதுப் புது ஃபேஷன்களை உற்பத்தி செய்வது. ''பெண்மணிகளின் விருப்பு, வெறுப்புகள் என்ன? விருப்பு வெறுப்பாகவும் வெறுப்பு விருப்பாகவும் மாறுவது எப்போது?'' போன்ற கேள்விகளுக்குப் பதில் கண்டுபிடிக்க வேண்டுமானால் பல ரகப் பெண்களைப் பலமுறை பலப் பல இடத்தில் நீங்கள் பேட்டி காண நேரிடும். ஆனால் நீங்களோ பிரமீளாவுடன் பேசுவதற்கே தயங்கி யிருக்கிறீர்கள். அதனால் உங்களை மானேஜராக நியமிக்கச் சக்தியற்றவர்களாகி விட்டோம் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

கியூபிட்
பெண்களும் ஃபேஷனும் நிர்வாகி''

பிரபாகரின் தலை சுழன்றது.




- கேவலமான விஷயம்!
- பாஷாங்க ராகம்
- விஞ்ஞானப் படங்கள்
- மூத்த பிள்ளை
- ரேஷன் தொல்லைகள்

திருநெல்வேலி, கன்னியாகுமரி, இராமநாதபுரம், மதுரை ஆகிய ஜில்லாக்களிலுள்ள பட்டதாரிகள் மேல் சபைக்கு ஓர் அங்கத்தினரைத் தேர்ந்தெடுப்பதற்காக நடைபெற்ற தேர்தலில் ஜனநாயக சோஷலிஸக்காரர்கள் நடந்து கொண்ட முறை உண்மையிலேயே வெட்கப்படக் கூடியது.

இத்தேர்தலைத் தங்கள் அரசியல் விளையாட்டுக்களில் ஒன்றாக்கிப் பட்டதாரித் தொகுதித் தேர்தலுக்குள்ள தனித்தன்மையைக் களங்கமாக்கி விட்டனர். ஒரு சில காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள், வேட்பாளர்களில் ஒருவர் காங்கிரஸ் என்றும், மற்றும் ஒருவர் சுதந்திரக் கட்சியைச் சார்ந்தவர் என்றும் ஒரு கதையை உண்டுபண்ணி வாக்குரிமையுள்ள பட்டதாரிகள் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த வேட்பாளரையே தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதாகக் கோரினர். முக்கியமாக நெல்லை ஜில்லாவின் தென் பகுதியில் இவ்விளையாட்டுக்கள் அதிகமாக நடைபெற்றன. ஓர் எம். எல். ஏ. தாம் தலைவராக இருக்கும் பஞ்சாயத்து யூனியனுக்குச் சொந்தமான 'ஜீப்'பைப் பயன்படுத்தி இத்தேர்தலில் ஓட்டு வேட்டையாடினார் என்பதை எழுதவும் வெட்கமாக உள்ளது. அதே பஞ்சாயத்து யூனியன் அதிகாரி (பிளாக் டெவலப்மெண்ட் ஆபீசர்) குறிப்பிட்ட வேட்பாளருக்காக அரசாங்க ஜீப்பில் ஊர் ஊராகச் சுற்றி, தமக்கு வேண்டிய அந்த வேட்பாளரை ஆதரிக்கும்படி பிரசாரம் பண்ணியது கேவலமான விஷயமாகும். இந்த நிலையில் நாட்டில் ஜனநாயக சோஷலிஸம் எவ்வளவு வர இயலும்?

வள்ளியூர்
10—4—66 அ.பட்டாபிராமன்

திரு ஜானகிராமன் கதையை (புத்தாண்டு மலர்) படித்த பல நண்பர்கள் இன்னமும் ஓயாமல் 'ஏன் இப்படி எழுத வேண்டும்?' என்றே வினாவித் தள்ளுகிறார்கள். இப்படிச் சொன்ன அத்தனை பேரிடமும் விடாமல் நான், 'ஓர் ஆண் மகன் குடும்பத்தில் தனக்குள்ள ஒரு பொறுப்பை உணராமல் தறிகெட்டு பாட்டிலோ (?) அல்லது வேறு எதிலோ அலையும்போது ஒரு மனைவியின் கடமைதான் என்ன? வாய் அளவில் பதிபக்தியை மெச்சிக் கொண்டு குட்டிச்சுவராகப் போக வேண்டுமா?' என்று எதிர்க் கேள்விகள் பல போட்டுத் திணற அடித்தேன். சமுதாயத்தில் புதிய உணர்வுகளும் கோட்பாடுகளும் உருவாகி வருகின்றன என்று எச்சரித்தேன். யாரும் வாயைத் திறக்க வில்லை. காலையில் காரியாலயத்தில் ஒரு நண்பருடன் அரை மணிக்கு மேல் சம்வாதம்.

பெரம்பூர்
18—4—66 ஜடாதரன்

தமிழில் விஞ்ஞானப் படங்கள் வெளிவர வேண்டும் என்பது குறித்து திரு சௌரி ராஜனைப் பேட்டி கண்ட விவரங்களை ஊன்றிப் படித்தேன். இதே ஆவல் என் உள்ளத்தில் மட்டுமன்று — என் போன்ற அறிவியல் மாணவர்கள் அத்தனை பேர் நெஞ்சத்திலும் நிலவி வருகிறது. எடுத்தவுடனேயே தமிழில் விஞ்ஞானப் படங்கள் தயாரிப்பதற்குப் பதிலாக ஏற்கனவே வெளிவந்துள்ள ஆங்கில அறிவியல் படங்கள் சிலவற்றைத் தமிழில் 'டப்' செய்து அவற்றைத் திரையிட்டு வரவேற்பு எவ்வாறு இருக்கிறது எனப் பார்க்கலாம்.

திருச்சிராப்பள்ளி
17—4—66 எஸ். குருமூர்த்தி பி. எஸ்ஸி.

துரோணனின் 'மூத்த பிள்ளை' நல்ல வாழ்க்கையின் பிரதிபலிப்பாக உள்ளது. ஏங்கன்னுவைப் போல் உண்மையாக வாழும் மனித உள்ளங்களுக்கு நிம்மதி தரும் அழகான முடிவு.

சென்னை
3—4—66 பரதன்

ஏன் ஐயா இப்படி எல்லாம் எழுதிப் படிப்பவர்களை வருத்தப்பட வைக்கிறீர்கள்? கதைகள் படிப்பது கவலைகளை மறப்பதற்காக— கவலைகளை அதிகப்படுத்துவதற்காக அல்ல.

கல்கத்தா
31-3-66 ஆலங்கரை சந்திரன்

ரேஷன் வாங்குபவர், விற்பவர்களின் கஷ்டங்களைப் பற்றிப் பேட்டிக் கட்டுரையில் மிக விவரமாக எடுத்துக் காட்டியுள்ளீர்கள்.

உணவு மண்டலங்களை ஒழித்து, சர்க்கார் உணவுப் பண்டகங்களில் ஏகபோக உரிமையுடன் செய்யும் வியாபாரத்தையும் ஒழித்தால், இந்த மாதிரியான பற்றாக்குறையை ஒழித்து விடலாம் என்று பொருளாதார நிபுணர்கள் கூறியும் அரசாங்கம் விடாப்பிடியாக இவற்றைப் பிடித்துக் கொண்டிருப்பதற்குக் காரணம் அவர்களுக்கு ஏற்படும் அனுகூலங்களை இழக்கச் சம்மதிக்காததுதான்.

பாண்டிச்சேரி
3—4—66 ஸ்ரீகாந்தன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

வெள்ளை
டெட்
சலவையின்
மேன்மை
வெண்மை
யுடன்
தூய்மை




வெள்ளை டெட் பவுடரினால் மட்டும்தான் உங்கள் வெள்ளைத் துணிகளை பளிச்சிடும் வெண்மையுடனும் வண்ண நிறத் துணிகளை துப்புரவாகவும் வெளுக்க முடியும். நவீன டெட் ஒன்றுதான் துணிகள் பாழாகாமல் சலவை செய்ய உதவுகிறது.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட். பம்பாய்

